

# ஸப்தகிரி

ஜூன், 1994

விலை ரூ. 2/-

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



***குன்றில்நின்று வான்இருந்து நீள்கடல்கிடந்து - மண்***
***ஒன்றுசென்று அதைஒன்றைஉண்டு அதுஒன்றுஇடந்து***
***பன்றியாய்***
***நன்றுசென்றநாள் அவற்றுள்நல்லுயிர் படைத்தவர்க்கு***
***அன்றுதேவு அமைத்தளித்த ஆதிதேவன் அல்லையே!***

திருவேங்கடவன் திருமலையில் நின்றும், பரமபத்தில் வீற்றிருந்தும், பெரிதான திருப்பாற்கடலிலே திருக்கண் வளர்ந்தருளியும், இப்பூமண்டலத்தை ஒருகால் வியாபித்தும், மற்றொருகால்அப்பூமியை விழுங்கியும், மற்றொருகால் அப்பூமியியை பன்றி உருவமாய் இடந்தும், நன்றாய் சென்ற நாட்களிலே நல்ல உயிரான மக்களை பிறப்பித்தும், அப்போது அந்த மக்களுக்கு (அவரவர்களுடைய குணங்களுக்கு ஏற்றபடி வணங்கத்தக்க) தேவதைகளை ஏற்படுத்தியும் (இவ்வாறு) நன்மை பல செய்தருளிய பரம புருஷனை நீயே காண்பாய்.

(-திருச்சந்தவிருத்தம் - 48)

# ஸப்தகிரி

## ஜூன் - 1994

தனிப்பிரதி ரூ. 2 — மலர் 25
வருடச்சந்தா ரூ. 24 — இதழ் 1

சிறப்பாசிரியர் :
திரு. டி.வி.எஸ்.என். மூர்த்தி, ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. ஸ்ரீ விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.

## உள்ளுறை

பக்கம்



### அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை :25-ஆம் ஆண்டில் ஸப்தகிரி
முதல் உள்ளட்டை :ஸ்ரீபத்மாவதி தாயார் கோயில், திருச்சானூர்.
2-வது உள்ளட்டை ஸ்ரீபத்மாவதி தாயார் கோயிலின் தெப்போத்ஸவம் - திருச்சானூர்.
பின்னட்டை :ஸ்ரீ அனுமான் - சித்திரம்: கே. ஜெகதீஷ்.

JAGADISH

# உங்களுடன்...

"மனிதன் எதனை விரும்புகின்றான்? எதனை வெறுக்கின்றான்? மனிதன் எதனை விரும்பினாலும் மகிழ்ச்சியையே, இன்பத்தையே இறுதியாக எதிர்பார்க்கின்றான். அதே போன்று மனிதன் தனக்குத் துன்பம் தரும் எதனையும் வெறுக்கின்றான். எங்கும், எதிலும் தனக்கு வெற்றி வேண்டுமென்றே விரும்புகின்றான். ஏமாற்றங்களை அவன் என்றும் வெறுக்கத்தான் செய்கின்றான். இது ஒரு சர்ாசரி மனிதனின் மன இயல்பு. விருப்பு வெறுப்பு அற்றவன் ஞானியாகி விடுகிறான். ஆனால் முதலில் மனிதன் மனிதனாக வாழவேண்டும் என்ற எண்ணமே இன்றையத் தேவையாகும். ஆகவே மனிதன் ஞானியாக விளங்கவேண்டும் என்பதைவிட, மற்றவர்க்கு அவன் பிரச்சனையில்லாத, துன்பம் தராத ஒரு ஜீவனாக இருப்பதையே நாளும் இந்த சமுதாயம் எதிர்பார்க்கின்றது.

மனிதன் மனிதனாக வாழ்வதெப்படி? ஏமாற்றங்களிலிருந்தும், துன்பங்களிலிருந்தும் மனிதன் விடுபட்டாலே அவன் வாழ்வு நலமாக அமைந்திடும். வாழ்க்கை அமைதியாக விளங்கிடும் போது, மனிதன் மனிதனாக வாழ்வதென்பது எளிதாக அமையும். மனிதன் தன் துன்பங்களை மறக்க பலவகைகளில் பொழுதுகளைப் போக்குகின்றான். ஆனால் இன்றைய நிலையில் தன் பிரச்சனைகளை மறந்து, தன்னை மேம்படுத்திக்கொள்ளும் பொழுதுபோக்குகளில் ஒன்றாக எதனை மனிதன் கருதுகின்றான்? அல்லது எது பொழுதுபோக்காக அமையும் என்பதைச் சற்றே சிந்திக்க வேண்டும்.

ஒருவனுடைய துன்பத்தைக் கண்டு தன் துன்பத்தை மறப்பதாலோ அல்லது மற்றவர்களுடைய பிரச்சனைகளைக் கண்டு மகிழ்ந்து தன்னை மறப்பதாலோ ஒருவன் தன்னுடைய துன்பத்தையோ, பிரச்சனையையோ நிரந்தரமாகத் தீர்த்துக்கொள்ள முடியாது. செய்யும் தொழில் நேர்மையாக இருந்தாலும்; ஆற்றும் கடமையில் தீவிரமாக இருந்தாலும், அது தொடர வேண்டுமென்றால் அவன் மனமும், அறிவும் எப்போதும் ஆக்கப்பூர்வமாக, தூய்மையானதாக, ஆற்றல் உள்ளதாக செயல்பட வேண்டும். அதுபோது அறிவுக்கும், மனதிற்கும் உற்சாகமூட்டுவதாக அமைவது இலக்கியம் ஒன்றேயாகும். அவ்இலக்கியம் மேன்மையானதாக விளங்க வேண்டுமாயின் அறத்தின் நிழலில், சமயத்தின் அடிப்படையில் உருவாக்கப்பெற்றதாக அமைய வேண்டும். ஆம் வேதங்களும், இதிகாசங்களும், காவியங்களும், புராணங்களும் மனிதனை நெறிபடுத்தக்கூடிய பாதைகளாக உள்ளன. இதுபோது அவ்இலக்கியங்கள் நேரிடையாக, மூல நூல்களாக, சாமான்யரின் கைகளில் கிடைத்திட்டபோது, அவை கையில் கிடைத்திட்ட தங்கப் பாளங்களாக, வைரக்கட்டிகளாக இருந்துவிடலாம். ஆனால், தங்கத்தின் - வைரத்தின் அழகு, பெருமை, ஆற்றல், சிறப்பு அவற்றை நகைகளாக செய்து அணிந்து கொள்ளும்போதுதான் தெரியவரும். அதனைத்தான், அச்சமய இலக்கியக் கருத்துக்கூறுகளைக் கதைகளாக, கவிதைகளாக கட்டுரைகளாக, ஆராய்ச்சிச் செய்திகளாக, படங்களாக ஏன் துணுக்குகளாகவும் கொண்டு வெளிவரும் சமய இதழ்கள் செய்து வருகின்றன.

மனிதனின் பொழுதுபோக்கு அம்சங்களில் ஒன்றாக இன்றைய பத்திரிகை உலகம் பெரிதும் இடம் பெற்றுள்ளது. அவரவர்களுடைய மன இயல்புக்கும், அறிவு நிலைக்கும் ஏற்றவாறு, புற்றீசல்கள் போன்று தினசரிகளும், வார ஏடுகளும், திங்கள் இதழ்களும் வியாபார நோக்கத்துடன் வெளி வந்துகொண்டிருக்கும் இன்றைய நிலையில் 'சமயப் பத்திரிகைகள்' அவற்றுடன் எதிர் நீச்சல் போட்டு வருகின்றன. பண்டிகைகளின் போதும், சடங்குகளின் போதும், கோபுரங்களைக் கண்டபோதும் மட்டுமே இறையுணர்வை தோற்றுவிக்கும் சமயத்தின்பங்கு இன்றைய அவசர வாழ்க்கையில் இரண்டாம் பட்சமாகவே இருந்து வருகிறது. ஆனால் இந்திய மண்ணைப் பொறுத்தவரை சமயமும் வாழ்க்கையும் பிரிக்க முடியாத வாழ்க்கை முறையாக திகழ்ந்து வருகின்றது. அதனால்தான் 'உடம்பே ஆலயம்' என்று கூறிப்போந்தனர் ஆன்றோர். இந்த ஆலயம் தூய்மையாக விளங்க வேண்டுமாயின், அதில்

இறைவன் குடியிருக்க வரவேண்டுமாயின், மானிடர்க்குத் தேவையானது என்ன? அவற்றை அவனுக்குக் கிடைக்கச்செய்வது யார்? என்ற வினாக்களுக்கு விடை காணவேண்டும்.

இந்த நிலையில்தான் சமயப் பத்திரிகைகள் ஒரு பொழுதுபோக்குச் சாதனமாக மட்டுமின்றி, மனிதன் தன்னை எவ்வாறு மேம்படுத்திக்கொள்ள முடியும், அதனால் அவன் பிறவியை எவ்வகையில் பொருளுள்ளதாக மாற்றிக் கொள்ள முடியும் என்பதற்கு ஒரு வழிகாட்டியாகவும் விளங்குகின்றன.

சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு தி.தி. தேவஸ்தானத்தின் ஒரு தகவல் ஏடாக மலர்ந்த ஒரு பத்திரிகை ஒரு குழந்தையின் வளர்ச்சியைப்போல் ஊர்ந்தும், தவழ்ந்தும், நடையாடியும்வந்து இன்று தன்னிறைவு கொண்ட பத்திரிகைக்குரிய முழு இலக்கணங்களைக் கொண்ட 'சமய மாத இதழாக' 1970 முதற்கொண்டு ஸப்தகிரி எனும் பெயரைத் தாங்கி வெற்றிநடை போட்டு வருகின்றது.

தமிழ் உள்ளிட்டு ஐந்து மொழிகளில் வெளிவரும் 'ஸப்தகிரி' இந்து சமயத்தின் ஒரு பிரிவினர்க்கு மட்டுமே என்று தன்னை இனங்காட்டிக் கொள்ளாது, இன்றையத்தேவையான 'இந்து சமய ஒற்றுமை'யின் பெருமையினை, அவசியத்தினை மனதிற்கொண்டு இந்திய மண்ணின் பெருமை பேசும் பல்வேறு சமயப் பிரிவுகளின் தத்துவங்களின் சிறப்பையும் வெளியிட்டு, சமயப் பத்திரிகை உலகில் தனக்கென ஒரு முத்திரையினைக் கொண்டு விளங்குகிறது.

'ஸப்தகிரி'யின் இந்த வெற்றிக்குக் காரணம் யார்? பத்திரிகையினை வெளியிடும் தி.தி. தேவஸ்தானம் மட்டுமே காரணமா? ஏழடுக்கு மாளிகையினை ஒருவர் கட்டினாலும், அம்மாளிகைக்கு ஒருவர் குடியேறும் போதுதான், மாளிகைக்கு அழகும் பெருமையும் வந்து சேரும். ஆம், 'ஸப்தகிரி'க்கு தேவஸ்தானம் பின்னிருந்து பொருளாதார உதவிகள் செய்திட்டாலும், அப்பத்திரிகைக்கு வாசகர்கள் கூட்டம் பெருகும்போதுதான் அப்பத்திரிகைக்கு ஏற்றமும், ஊற்றமும் கிடைக்கிறது. அந்த வகையில் ஸப்தகிரியை தொடர்ந்து பல ஆண்டுகளாக தானும் படித்து, தன் சந்ததியினர்க்கு அறிமுகப்படுத்தியும், பல சமயங்களில் இதழ் காலங்கடந்து வெளிவந்தாலும் தொடர்ந்து சந்தாதாரராக விளங்கிவரும் ஆயிரக்கணக்கான வாசகர்களின் ஆதரவினை 'ஸப்தகிரி' என்றென்றும் நினைவிற்கொள்ளும். மேலும், 'ஸப்தகிரி' விற்பனைப் பணியை ஒரு வியாபாரமாகக் கொள்ளாமல், 'வேங்கடவன் தொண்டாக' ஏற்று, அவ் இதழ் பல நேரங்களில் தாமதமாக வந்தாலும், வாசகர்களின் 'புகார் அம்பு'களைத் தாங்கிக் கொண்டு தொடர்ந்து பத்திரிகையின் விற்பனைப் பிரதிநிதி பணியை மேற்கொண்டு வரும் விற்பனையாளர்களின் ஒத்துழைப்பினை 'ஸப்தகிரி' என்றும் மறக்காது. 'ஸப்தகிரி'யின் உயர்வுக்கு எழுத்தாற்றல், அறிவாற்றல் மூலமாக தங்கள் பங்கினை செவ்வனே ஆற்றிவரும் எழுத்தாளர் பெருமக்களுக்கும் பத்திரிகை தன் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறது.

இவ் இதழ் முதற்கொண்டு தனது 25-ஆவது ஆண்டில் அடியெடுத்து வைக்கும் 'ஸப்தகிரி' தனது உயர்வுக்கும், வளர்ச்சிக்கும் ஆக்கப்பூர்வமான ஒத்துழைப்பினை தந்துவரும் அனைவர்க்கும் தேவஸ்தானத்தின் சார்பில் மீண்டும் தனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறது.



# செய்திச் சுருக்கம்

## படிவிழா

25ஆம் ஆண்டு திருப்பதி - திருமலை படிவிழா நிகழ்ச்சிகள் அணையில் வெகுசிறப்பாக நடைபெற்றன. மூன்று நாட்கள் நடைபெற்ற இந்நிகழ்ச்சிகளில் தமிழ்நாடு உள்ளிட்ட அண்டை மாநிலங்களைச் சார்ந்த 150 பஜனைக் குழுவினரைச் சார்ந்த சுமார் 5000 பக்தர்கள் கலந்து கொண்டனர். முதல்நாளன்று திருச்சானூர் தாயார் சன்னதியிலும், திருப்பதி அன்னமாச்சார்யா கலாமந்திர வளாகத்திலும் திரு. பித்துக்குளி முருகதாஸ், திரு. டி.எல். அனந்தநாராயண அடிகளார், சென்னை ஓம் முருகாஸ்ரம சுவாமிகள் ஆகியோரின் பஜனை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இரண்டாம் நாள் காலை பஜனைக்குழுவினரின் 'படியேறு விழா' அலிபிரி மலையடிவாரத்திலிருந்து தி.தி. தேவஸ்தான இணைச்செயலாட்சித் தலைவர் திரு.பி. வெங்கட்ராமய்யா, ஐ.ஏ.எஸ்., மக்கள் தொடர்பு அலுவலர் திரு. டி. சிவாஜி ஆகியோர் முன்னிலையில் இனிது தொடங்கியது. திருமலைப் படிகள்தோறும் மஞ்சள் பூசி, குங்குமம் வைத்து, தேங்காய் படைத்து கற்பூர ஒளி காட்டப்பட, உடன் பஜனைக் குழு அன்பர்களின் 'கோவிந்த நாமம்' திருமலை எங்கும் எதிரொலிக்க அன்று மாலை பஜனைக்குழுவினர் திருமலை சதஸ் அரங்கில் கூடினர். சதஸ்ஸில் திரு. பித்துக்குளி முருகதாஸ் அவர்களின் பஜனைப் பாடல்கள் நிகழ்ச்சி இனிது நடைபெற்றது.

மூன்றாம் நாள் காலை சதஸ் அரங்கில் தி.தி. தேவஸ்தான பொறுப்பாளர்களைக் கொண்டு தலைவர் திரு ஏ. செங்கல்ரெட்டி அவர்கள் தலைமை வகிக்க கவிஞர் சுப்பு ஆறுமுகம் குழுவினரின் 'ஸ்ரீநிவாச கல்யாணம்' எனும் வில்லுப்பாட்டு சிறப்பு நிகழ்ச்சி நடைபெற்றது. தொடர்ந்து சென்னை அக்ஷயா குழுவினர், பத்மகல்யாணி புவனேஸ்வரி குழுவினர் பங்கேற்ற இசை நிகழ்ச்சிகளும் சிறுமியர் சுபஸ்ரீ, ஜெயஸ்ரீ ஆகியோரின் பரதநாட்டிய நிகழ்ச்சியும் பலரோர் பாராட்ட வெகுசிறப்பாக நடைபெற்றன. பின்னர் திரு. ஏ. செங்கல்ரெட்டி அவர்கள் சிறுமி ஜெயஸ்ரீக்கு ரூ. 501/- பரிசு தந்தும், கவிஞர் சுப்பு ஆறுமுகத்திற்கு பொன்னாடை போர்த்தியும் கௌரவித்தார்.

25ஆம் ஆண்டு படிவிழா முன்னிட்டு, தேர்ந்தெடுக்கப்பட்ட நான்கு பஜனைக் குழுவினர்க்கு, படிவிழா சங்கத்தின் சார்பில் ஹார்மோனியப் பெட்டிகளும், இரண்டு பஜனைக் குழுவினர்க்கு இரண்டு **கோயில்** குடைகளும் (அவர்கள் ஊர் கோயில்களுக்கு) இலவசமாகக் கொடுக்கப்பட்டன. திருமலையில் படிவிழாக்குழுச் செயலர் திரு. ஆற்காடு செ. நரசிம்மன் அவர்கள் நன்றி நவின்றார். படிவிழா நிகழ்ச்சி ஏற்பாடுகளை பொருளாளர் திரு. வி. ஏ. புண்ணியகோட்டி, துணைச்செயலர் திரு. எல்.கே. நாகய்யா ஆகியோர் முன்னின்று மேற்கொண்டனர்.

* * *

## புதிய மண்டபம்

ரூ. 30 கோடி செலவில் திருமலையில் 'வைர வடிவு' கொண்ட 'வேங்கடேஸ்வரா வைபவோத்ஸவ மண்டபம்' எனும் அரங்கு ஒன்று கட்டப்பட்டு உள்ளது. இப்பணி நான்காண்டுகளுக்குள் முடிக்கப்படும் என்று கருதப்படுகிறது. மண்டபத்தின் உள்ளும் வெளியும், கோபுரங்களும் நீல நிற சலவைக்கற்களால் அலங்கரிக்கப்படும். இச்சலவைக்கற்கள் தமிழ்நாடு கோவனூரிலிருந்து பெறப்படும். சுமார் 4000 பக்தர்கள் அமரக்கூடிய **இம்மண்டபத்தில் கல்யாணோத்**





ஸவம், பிரம்மோத்ஸவம் உள்ளிட்ட பல நிகழ்ச்சிகள் இடம் பெறும். பாதுகாப்பு பொருட்டு திருமலைக் கோயிலின் புனித வாகனங்கள் யாவும் எதிர் காலத்தில் இம்மண்டபத்திற்கு மாற்றப்படும்.

* * *

## புதிய திருமண மண்டபம்

ரூ. 23 இலட்சம் செலவில் கட்டப்பட்ட தி.தி. தேவஸ்தானத்தாரின் புதிய திருமண மண்டபத்தினை தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுத் தலைவர் திரு. ஏ. செங்கல் ரெட்டி அவர்கள் அண்மையில் திறந்து வைத்தார்.

* * *

## இராமானுஜர் ஜெயந்தி

தி.தி. தேவஸ்தானத்தாரின் ஆழ்வார் திவ்யப் பிரபந்தத் திட்டத்துறை சார்பில் ஸ்ரீமந் இராமானுஜரின் ஜெயந்திவிழா 5-5-94 முதல் 14-5-94 வரை திருப்பதி ஸ்ரீபெரும்பூதூர், ஸ்ரீரங்கம், காஞ்சிபுரம், மேல்கோட்டை, நரசாபுரம் ஆகிய இடங்களில் வெகுச்சிறப்பாக நடைபெற்றது. 5-5-94 அன்று மாலை திருப்பதி ஸ்ரீஅன்னமாசார்யா கலாமந்திரத்தில் நடைபெற்றது. இதுபோது 'இராமானுஜரும் விசிஷ்டாத்துவைதமும்' எனும் தலைப்பில் டாக்டர் கே.வி. ராமகிருஷ்ணுசார்யுலு அவர்களும், 'இராமானுஜர்' எனும் தலைப்பில் வித்துவான் எம். கொண்டமாசார்யுலு அவர்களும் சொற்பொழிவாற்றினர். மற்றைய இடங்களில் நடைபெற்ற ஜெயந்தி நிகழ்ச்சிகளில் தவத்திரு யதிராஜ சமபத்குமார் ரங்காசார்யா சுவாமிகள், டாக்டர் உ.வே. ஸ்ரீமான் லக்ஷ்மி தாதாசார்யா, ஸ்ரீமான் உ.வே. வெங்கடாசார்யாசுவாமி, ஸ்ரீமான் உ.வே. பி.டி. ஜி. வி.எஸ். நரசிம்மாசார்யா சுவாமி, ஸ்ரீமான் உ.வே. டி.ஏ. கிருஷ்ணமாச்சார்யா சுவாமி, ஸ்ரீமான் பி.பி. உ.வே ராஜஹம்ஸம் , தவத்திரு ஸ்ரீயதிராஜ ராமானுஜ ஜீயர், டாக்டர் ஆர்.வி. கமலக்கண்ணன், ஸ்ரீமான் ஸ்ரீரங்க ராமானுஜ ஜீயர் சுவாமிகள், திரு. மேடஸானி மோகன், ஸ்ரீமான் உ.வே. சுதர்ஸன கிருஷ்ணமாச்சார்யா பட்டர் சுவாமி ஆகியோர் சமயச் சொற்பொழிவு களாற்றினர்.



## பொரி ஹோமம்

திருமணச் சடங்குகளில் ஒன்றுதான் "பொரி ஹோமம்" பொரியை பெண்ணின் கையில் கொடுத்து ஹோமத்தில் போடச்சொல்லும் புரோகிதர் பெண்ணுக்காக அவரே அந்த மந்திரத்தைக் கூறுகிறுர்.

"எனக்கு எவ்வகையிலிலும் மேன்மையளிக்கின்ற இப்பொரிகளை அக்னிதேவருக்கு அர்ப்பணம் செய்கிறேன். என் கணவர் நீண்ட ஆயுளுடையவராக இருக்கவேண்டும். எனது சுற்றத்தினர் மேன்மேலும் நன்மை பெற வேண்டும்" என்பதுதான் அதன் பொருள்.

திரு. க. இராமலிங்கம் - புதுப்பேட்டை.



# உங்களுடன் ஒரு சில....

"உப்பரிகையின் உச்சிக்குப் போனபிறகு ஏறிவந்த படிக்கட்டுகள் தெரிவதில்லை" என்பது ஒரு முதுமொழி. வானத்தைத் தொட்டுவிடும் உயரத்திலிருந்து பார்த்திடும்போது கீழே மேடு பள்ளம் எல்லாமே சமமாகவும், நகர்ந்திடும் உயிர்கள் யாவும் நகர்ந்திடும் பொம்மைகளாகவும் தெரியவரும். உடனே மேலே பார்த்திடின் எதிரே உள்ள வெட்டவெளி பூதாகாரமாகத் தெரியும். ஆம் ஒரு காலக்கட்டத்தில், கடந்துபோனவையாவும் ஏதோ கனவாகத் தெரிய எதிர்காலம் ஒரு கேள்விக்குறியாகத்தோன்றுவது ஒரு தவிர்க்கமுடியாத உணர்வாகும். அதுபோது நடந்து கொண்டிருக்கும் இக்கணமே, நம்பிக்கைத் தருவதாக, பயனுள்ளதாக, முக்யமானதாக நமக்குச் சொந்தமானதாக, மறுபடியும் கிடைக்கப்பெருத ஒரு தருணமாக விளங்குகிறது. இத்தருணத்தில் நான் உங்களுடன் ஒரு சில வார்த்தைகள் பகிர்ந்திட விரும்புகின்றேன்.

இம்மாத இதழ் வாயிலாக, 'ஸப்தகிரி' தனது 25ஆவது வயதில் அடியெடுத்து வைத்துள்ளது என்பதைப்பார்க்கும் போது, அப்பத்திரிகையின் ஆசிரியர் எனும் நிலையில், தன் பெண்ணுக்குத் திருமணம் செய்துவிட்ட ஒரு தந்தையின் உணர்வில் - மகிழ்ச்சியும் இன்பமும் கலந்த உணர்வில் - மூழ்கியிருக்கிறேன்.

இருபது பக்கங்களைக் கொண்ட ஒரு பத்திரிகையாக - இல்லை - இல்லை - ஒரு 'வழிகாட்டி ஏடாக' தி.தி.தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட்டு அந்நிலையில், 'அக்குழந்தைப் பத்திரிகை'யின் எதிர்காலம் என்கையில் ஒப்படைக்கப்பட்டது. அக்குழந்தைக்கு 'ஸப்தகிரி' எனும் பெயர் சூட்டி, அதனை அழகு பார்க்கும் வகையில் 'ஸப்தகிரி' தமிழ் உள்ளிட்டு ஐந்து மொழிகளில் தனித்தனியாக வெளியிடப்பட்டு, அதன் வளர்ச்சிக்கு மெருகூட்டும் வகையில் அதன் அளவும், அமைப்பும் மாற்றியமைக்கப்பட என் கனவின் முதல் காட்சி நனவாகத் தொடங்கியது.

'ஸப்தகிரி' பணி அலுவலகத்தை என் பள்ளியாகவும், கோயிலாகவும் கொண்ட நான், இதுவரை சாதித்தது என்ன என்பதை சற்றே எனது முப்பது வருடகால அனுபவங்களை அசைபோட்டுப் பார்க்கின்றேன். காலம், முதிர்ச்சிக் கோலங்கள் வரையலாம். ஆனால் அவை தரும் அனுபவங்கள் என்றும் இளமையின் ஊற்றே ஆகும். பத்திரிகை தந்திட்ட அந்த இனிய அநுபவங்களை காலம் அனுமதித்தால் இன்னும் சுவைக்கவே என் மனம் விரும்புகின்றது. மேலாண்மை, சக ஊழியர்கள், எழுத்தாளர்கள், வாசகர்கள், நான் ஆகியோர் சூழ்ந்த அந்த வட்டத்திற்குள் நான் பெற்ற அனுபவங்கள் என்றென்றும் என் மனதில் பசுமையாக நிழலாடவே செய்யும்.

இத்தருணத்தில் இதுவரை, மூன்றாண்டுகளுக்கு ஒரு முறை மாறிவரும் தி.தி. தேவஸ் தானத்தாரின் பொறுப்பாண்மைக் குழுத்தலைவர்கள் மற்றும் உறுப்பினர்கள் 'ஸப்தகிரி' மீது காட்டிய ஆதரவினையும், மூன்றாண்டுமுதல் ஐந்தாண்டு வரை பதவியில் இருந்து

பத்திரிகையின் சிறப்பாசிரியராக பணியாற்றிய செயலாட்சித் தலைவர்கள் பத்திரிகையின் மீது காட்டிய பரிவையும், பாசத்தையும், கண்டிப்பையும், "உங்களுக்கு எந்தவிதத்திலும் சளைத்தவர்கள் நாங்களல்ல" எனும் விதத்தில் பொறுப்புடனும், துடிப்புடனும் விளங்கிவரும் பத்திரிகையின் துணையாசிரியர்கள் உள்ளிட்ட மற்றைய உடன் அலுவலக ஊழியர்கள் தந்துவரும் ஒத்துழைப்பினையும், ஆர்வத்தையும் 'பத்து காசு பெறலாமே' என்று எண்ணாது, அப்பரந்தாமனின் திருவருளை 'ஸப்தகிரி' சேவை மூலம் பெறலாம் என்று எண்ணி, இதழ் தாமதமாக சில நேரங்களில் வெளிவந்தாலும், காத்திருந்து இதழ்களை விற்பனைக்குப் பெற்றுச் செல்லும் விற்பனையாளர்களின் பக்தி ஈடுபாட்டினையும், பத்திரிகை மீது காட்டிய பேராதரவினையும், இதழ் ஒன்று காலக்கிரமத்தில் வராவிட்டால், அவ்இதழ் பெறும் வரை அலுக்காமல் அஞ்சலட்டைகள் எழுதி, பத்திரிகையின்பால் தாங்கள் கொண்டுள்ள உரிமையினை நிலைநாட்டத்துடிக்கும் வாசகர்களின் அன்பினையும், இறைவனின் பெருமை எழுதுவதே தங்கள் பிறவிப்பயனாகக் கருதி, "தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' எனும் வகையில், இந்து சமய இலங்கியங்களை அறிந்தும், அனுபவித்தும், ஆராய்ந்தும் எழுதிவரும் எழுத்தாளர் பெருமக்களின் உழைப்பினையும், 'ஸப்தகிரி' தனது 25ஆவது ஆண்டில் அடியெடுத்து வைத்திடும் இதுபோது, நான் எண்ணி இறுமாந்து, மகிழ்ச்சிக் கண்ணீர் பெருக அவர்களுக்கு என் நன்றியை, இன்று சிரம் தாழ்த்தித் தெரிவிக்கத் தவறுவேனாயின், நாளை ஒரு நாள் தலைகுனிந்து வேதனைப்பட வேண்டிவரும் என்றே கருதுகின்றேன்.

இறுதியாக, என்னுடைய எல்லா முயற்சிகளின் வெற்றிக்கு முதல்படியும், இறுதிப்படியாகவும் விளங்கிடும் எல்லோர்க்கும் மீண்டும் என் நன்றியைப் பணிவன்புடன் தெரிவித்து, தொடர்ந்து தங்களுடைய ஒத்துழைப்பினை நல்கிடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

வே. சுப்பாராவ்

# 'ஸப்தகிரி'க்கு வயது இருபத்தைந்து

**மி**கத் தொன்மைக் காலத்தினைச் சேர்ந்ததாகக் கருதப்படும் ஏழுமலையின் புனித ஆலயத்தினை, தானாகவே தன்னை வெளிப்படுத்திக்கொண்ட திருவேங்கடவனின் திருக்கோயிலினை அறியாதார் அவனியில் எவரும் இரார் எனத் துணிந்து சொல்லக்கூடிய அளவிற்கு அது உலகப்புகழ் பெற்று விளங்குகின்றது.

அதன் நிருவாகம் அன்று முதல் இன்று வரை நாடாளும் ஆட்சியாளர்களின் மேற்பார்வையிலேயே இருந்து வந்துள்ளது. கோயிலின் தினசரி வழிபாடுகள், திருவிழாக்கள் ஆகியவற்றின் நிரலினை வலுவானதோர் அஸ்திவாரத்தின் மீது திருத்தியமைத்து, அது உரிய முறையினில் நடைபெறும் பொருட்டுச் சமய மேற்பார்வையாளர்களை நியமித்த பெருமை, வைணவத்திற்கே ஒரு புதுப்பொலிவினை ஊட்டிப் பல திறப்பட்ட மக்களும் எளிதில் பின்பற்றக்கூடிய பிரபத்தி அல்லது சரணாகதி நெறியினை பிரபலப்படுத்திய மாபெரும் வைணவ ஆசாரியப் பெருந்தகையாகிய இராமானுஜரையே சேரும்.

நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும், ஏன், அயலநாடுகளிலிருந்தும்கூடத் திருமலைக்கு வரும் பக்தர்களின் கூட்டம் பெருகவே, கோயில் நிருவாகம் பலதுறைகளைத் துவக்கியது. முக்கியமாக, பல்வேறுமொழிகள் பேசும் பக்தர்களுக்குக் கோயில் பற்றியும் கோயிலின் சேவைகள் குறித்தும் பல செய்திகளையும் தகவல்களையும் தெரிவிக்கவேண்டியிருந்தது. இதற்கான எளியமுறை திருமலை-திருப்பதி தேவஸ்தானத்திற்கெனத் தனிப்பட்டதொரு பத்திரிகையினைத் துவக்குவதே ஆகும் என்பது உணரப்பட்டது. பத்திரிகையும் துவக்கப்பட்டது.

இப்பத்திரிகையின் வளர்ச்சியினை தொடக்கநிலை, இடைநிலை, வளர்நிலை எனப்பகுத்துப் பார்ப்பது அதன் செய்திச் சேவையினையும் சமயத்தொண்டினையும் நன்கு புரிந்து கொள்ள உதவுவதாக அமையும்.

திருமலை திருப்பதி தேவஸ்தானச் சட்டம் (அன்றையச் சென்னை அரசின் 1933ஆம் ஆண்டின் 29ஆவது சட்டம்) இயற்றப்படுவதற்கு முன்னர், ஏறத்தாழ ஒரு நூறு ஆண்டுகள் கோயில் நிருவாகம் ஸ்ரீஹாதிராம்ஜி மடத்தின் மஹந்துக்களின் மேற்பார்வையில் நடைபெற்றது. மஹந்துக்களின் நிருவாகக் காலத்தின் இறுதியினில் ஆகஸ்ட் 1932இல் 'திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரர்' என்னும் பெயருடன் ஒரு மாத சஞ்சிகை முதன் முதலாக வெளியிடப்பெற்றது. அதன் நோக்கம் திருவேங்கடவனின் பக்தர்களுக்கான சேவையும் இந்திய இலக்கியம், கலைகள் மற்றும் அறிவியல் பற்றிய ஆய்வுக்கட்டுரைகளை வெளியிடுவதுமாக இருந்தது. நல்லமுறையில் வெளிவந்திடினும், குறுகிய காலத்திற்குள்ளாகவே அது நிறுத்தப்பட்டு விட்டதாகத் தெரிகிறது.

ஆயினும், அத்தகையதொரு பத்திரிகையின் அவசியம் அவர்களுக்குப் பின்வந்த நிருவாகத்தினரால் உணரப்பட்டே வந்தது. கருத்து கனியும் காலம் வந்தது போலும். ஏப்ரல் 1950இல் 'திருமலை திருப்பதி தேவஸ்தானம் மாத ஏடு' (Tirumalai Tirupati Devasthanams Monthly Bulletin) என்னும் பெயருடன் தேவஸ்தானக் கோயில்கள், பக்தர்களுக்கான பல்வகை வசதிகள் ஆகியன பற்றிய தகவல்களைத் தருவதையே முக்கிய நோக்கமாகக் கொண்டு ஒரு பத்திரிகை வெளியிடப்பட்டது. டெம்மி எட்டில் ஒன்று என்னும் அளவினதாக ஆங்கிலம், சம்ஸ்கிருதம், தெலுங்கு, தமிழ், கன்னடம், இந்தி ஆகிய் மொழிகளில் சீரிய கட்டுரைகளையும் கொண்டதாக அது விளங்கியது. தேவஸ்தான அச்சகக் கண்காணிப்பாளரே செயலாட்சித் தலைவரின் சார்பாக இதனைப் பதிப்பித்து வந்தார். 1961 வரை இந்நிலை நீடித்தது. ஆனால், பத்திரிகை நிபந்தனைகளுக்குட்பட்டதோடு மாத சஞ்சிகையாக (Journal) அது பரிணமித்தது 1961இல் தான். இதன் விளைவாக, அதற்கெனத் தனிப்பட்ட ஆசிரியரும் அலுவலக உதவியாளர் குழுவினரும் 1963இல் நியமிக்கப்பட்டனர்.

1970 தி.தி. தேவஸ்தான பத்திரிகைக்கு அப்போது இருவது வயது. பத்திரிகையின் வரலாற்றினில் அது ஒரு நன்னாள். அதுவரை அது 'ஏடு' அல்லது 'சஞ்சிகை'

என்னும் பொதுப் பெயரினாலேயே அழைக்கப்பெற்று வந்தது. அதற்கெனத் தனிப்பெயர் ஒன்று இருக்கவேண்டும் என அதனுடன் தொடர்புகொண்டோர் யோசித்தனர். 'ஸப்தகிரி' என்னும் பொருத்தமான பெயர் தேவஸ்தான அதிகாரிகளின் நல்லாசிகளுடன் அதற்கு ஜூன் 1970இல் சூட்டப்பட்டது. ஆங்கிலம், சம்ஸ்கிருதம் ஆகிய பகுதிகளை மட்டும் பொதுவாகக் கொண்டு, தெலுங்கு, தமிழ், கன்னடம், இந்திப் பகுதிகள மட்டும் தனியாக இணைந்த பதிப்புகள் வெளிவந்தன. இதழின் அமைப்பும் பொருளடக்கமும் உயர்வும் செறிவும் பெற்று, வாசகர்களின் எண்ணிக்கையும் பல்கிப்பெருகியது.

1972 ஏப்ரல் முதல் 'ஸப்தகிரி'யின் வடிவம் கிரவுண் தாளில் ஒன்று அளவிற்கு விரிவுற்றது. 1975 ஜனவரி முதல் பத்திரிகையின் அளவு மேலும் பெரியதாக 'டெமமி' நான்கில் ஒன்று ஆக அமைந்தது.

மேலும், ஆங்கிலம், தெலுங்கு, தமிழ், கன்னடம், இந்தி என்னும் ஐந்து மொழிகளிலும் தனித்தனியாக 'ஸப்தகிரி' தழைத்தது.

ஒவ்வொரு மொழிக்கும் திறமை வாய்ந்த தனித்தனி உதவி ஆசிரியர்களும் நியமிக்கப்பட்டனர். கோயில் நிகழ்ச்சிகள், பயணிகள் வசதிகள் ஆகியவை பற்றிய செவ்விய செய்தி விவரங்கள், கட்டுரைகளின் வீச்சு மற்றும் ஆழம், வனப்புமிகு வண்ணப்படங்கள் இவை காரணமாகவும் பிரதிகளின் எண்ணிக்கை பெருமளவிற்கு உயர்ந்தது. சிறுவர் சோலை, இளைஞர் பகுதி, மகளிர் பிரிவு போன்றவை 1980 இல் துவக்கப்பெற்றது. 'ஸப்தகிரி'யின் பயன்பாடும் தேவையும் வளரப் பெரிதும் உதவியது.

இந்து சமயத்தின் ஒவ்வொரு கூறினையும் பற்றிய அறிவு சார்ந்த கட்டுரைகளும் மதத் தத்துவங்களையும் சமயக கருத்துக்களையும் கதை போலச் சொல்லும் எழுத்துக்களும் 'ஸப்தகிரி'க்குக் கவர்சசி ஊட்டுகின்றன. தர்ம சாத்திர நுட்பங்கள், இந்திய நாடு முழுவதிலுமுள்ள சிறப்புமிகு ஆலயங்கள், ஆகமங்களின் விளக்கங்கள், இந்து சமயத்தின் அடிப்படை நூல்களான வேதங்கள், உபநிடதங்கள், தோத்திரப் பாடல்கள், நமது சநாதன சமயத்தைப் பல்வேறு இடர்மிகு காலங்களில் பாதுகாத்த ஆழ்வார்கள், ஆசாரியர்கள், நாயன்மார்கள் மற்றும் பாகவத இசைக்கலைஞர்கள் பற்றிய விவரங்கள், இந்து சமயத்தின் தொன்மை, மேன்மை மற்றும் பெருமை ஆகியவற்றைத் தக்க சான்றுகளுடன் விளக்கும் ஆய்வுக் கட்டுரைகள் 'ஸப்தகிரி' யின் சமயத் தொண்டினுக்கு விளக்கம் தருவன ஆகும். இடமின்மை காரணமாக, 'ஸப்தகிரி'க் கட்டுரைகளின் விரிவான ஆய்வு பற்றி இதில் கூற இயலவில்லை. எனினும், இந்து சமயத்தைக் குறித்த ஒரு கலைக்களஞ்சியத்தினையே உருவாக்குவதற்கு அவை நல்லதோர் அடித்தளமாக அமையும் என்பதில் ஐயம் ஏதும் இல்லை.

'ஸப்தகிரி'யின் சமூகத் தொண்டும் போற்றுதலுக்குரியதாகும். திருப்பதி வரையிலுள்ள இரயில்பாதையினை அகலப்படுத்துவது, நாட்டின் எல்லா முக்கிய நகரங்களிலிருந்தும் திருப்பதிக்கு நேரடியானப் பயண வசதிகள் அமைப்பது, திருப்பதியையும் திருமலையினையும் விமான மூலம், நாட்டின் பல பகுதிகளுடன் இணைப்பது போன்றவை 'ஸப்தகிரி'யின் தலையங்கங்களில் எடுத்துரைக்கப் பெற்று, இன்று செயலளவில் உருப்பெற்றுள்ளன.

'ஸப்தகிரி' என்னும் கவின்மிகு பெயரினைத் தாங்கி இருபத்தைந்தாவது ஆண்டில் அடியெடுத்து வைக்கும் 'ஸப்தகிரி' பத்திரிகையிடமிருந்து வாசகர்கள் எதிர்பார்ப்பது, அதன் பயன்பாடும் போதனையும் மேலும் வளர்ச்சியடைந்து, இந்து சமயத்தினைச் சேர்ந்த இளைஞர்முதல் முதியோர் வரை அனைவரும் அச்சமயத்தின் அடிப்படை உண்மைகளை உணர்ந்து, இந்து சமயம் பற்றிப் பிறர் எழுப்பும் ஐயங்களுக்குத் தக்கவாறு விடையளிக்கும் திறனையும் அறிவினையும் பெற அது உதவ வேண்டும் என்பதே ஆகும்.

அ. நடராஜன்,



(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

'உபைப்ரியன்'

## ஆறும் அத்தியாம்

## தியான யோகம்

பகவான் கூறியது :

*அனாச்ரித: கர்மபலம் கார்யம்*
*கர்ம கரோதி ய:।*
*ஸ ஸந்யாஸீ ச யோகீ ச ந*
*நிரக்நிர்ந சாக்ரிய:।। (1)*

"வினைப்பயனகளை எதிர்பார்க்காது யார் வினை ஆற்றுகின்றார்களோ அவனே துறவி. அவனே ஞானி. யாகத்தை (செய்யாது) விட்டவரும், வினை செய்யாது இருப்பவரும் துறவிகளல்லர்.'

[சாதாரணமாக துறவி அல்லது ஸந்யாஸி என்பவர்களுக்கு ஒரு பொறுப்பும் இல்லை என்பது பொதுவாக எண்ணப்பட்டு வருகிறது. அவருக்கென்ற குடும்பமோ, எதிர்பார்ப்புகளோ இல்லையென்பதால். ஆனால் உண்மையான துறவி என்பவன் பயன எதிப்பார்க்காது வினை செய்பவனேயாவான். வினை மட்டுமின்றி யாகம் எனும் வினையினையும் மேற்கொள்ள வேண்டும். இங்கு அர்ச்சுனன் தனக்குரிய போர்த்தொழிலை விட்டு விரக்தியாக துறவி நிலையில் பேசும் போது, பகவான் துறவிக்கும் பொறுப்பு உண்டு, கடமையுண்டு. வினையுண்டு என்று பகவான் உறுதிப்பட விளக்குகிறான். ஆகவே தனக்குரிய வினையை செய்பவனே உண்மைத்துறவி, யோகி என்று உணர்த்தப்படுகிறது. பயன் எதிர்பார்க்காது வினை செய்பவன் துறவி. பின்னர் அது போன்று தொடர்ந்து வினைகளை ஆற்றும்போது, அத்துறவியே ஞானியாக, யோகியாகத் திகழுகிறான்.]

*யம் ஸந்யாஸமிதி ப்ராஹுர்யோகம்*
*தம் வித்தி பாண்டவ:।*
*ந ஹ்யஸந்யஸ்தஸங்கல்போ*
*யோகீ பவதி கஸ்சன:।। (2)*

"பாண்டவா (அர்ச்சுனா), எதனைத் துறவு என்று கூறுகின்றார்களோ, அதனையே யோகம் என்று அறிவாயாக. ஏன் என்றால், சங்கல்பத்தை துறக்காதவன் யோகியாக முடியாது"

[லாட்டரி சீட்டு வாங்குவது என்பது ஒரு வினையாகும். அவ்வினையால் ஏற்படப்போகும் பலனை எதிர்பார்த்து மனதில் எண்ணங்களை ஏற்படுத்திக் கொள்வதென்பது சங்கல்பமாகும். அதாவது லாட்டரி சீட்டு வாங்கியபின், குலுக்கலில் தனக்கு பரிசு விழுந்தால் அப்பணத்தை எவ்வாறெல்லாம் செலவழிக்கலாம் என்று பல வழிகளில் மனம் திட்டம் போடுகிறது. அத்திட்டங்கள் நாளுக்கு நாள் மாறிக்கொண்டே இருக்கின்றன. இது மனம் அலைபாய்வதால், மனத்தில் சலனம் ஏற்படுவதால் ஏற்படுகின்றது. இதுபோன்ற அலைபாயும் மனதைக் கொண்டவன யோகியாக விளங்கமுடியாது. மனத்துறவு ஏற்படும் போது சங்கல்பம் எனும் எண்ணப்போக்குகள் நிறுத்தப்படுகின்றன. எண்ணப்போக்குகள் மறையும்போது யோகம் கைகூடுகிறது. ஆகவே மனம் உறுதியுடன் இருந்தால் தான் பற்றின்றி வினையும், தியானப்பயிற்சியினையும் மேற்கொள்ள முடியும். இதுபோது வினைப்பயன் துறவும் கர்ம யோகமும் ஒன்றாக இணைகின்றன.]



ஆருருக்ஷோர்முனேர்யோகம் கர்ம
காரணமுச்யதே:।
யோகாரூடஸ்ய தஸ்யைவ சம:
காரணமுச்யதே:।। (3)

"தியான யோகத்தை அடைய முயலும் துறவிக்கு வினை என்பது ஒரு கருவியாக அமைகிறது. (அதே நேரத்து) தியான யோகம் அடையப்பெற்றவனுக்கு வினையின்மை எனும் நிலையே (வினையேதும் மேற்கொள்ளாது இருத்தல்) ஒரு கருவியாகக் கூறப்படுகிறது."

[தியானம் என்பதும் ஒரு வினையேயாகும். பயன் ஏதும் கருதாத வினையாற்றலினால் மனம் தெளிவடைகிறது. மனம் தெளிவடையும் போது தியானத்திற்குத் தேவையான கட்டுப்பாடுள்ள ஒருமுனைப்பு உள்ளத்தாலும், உடலாலும் ஒருவன் பெறுகின்றான். அந்த நிலையில் அவன் தவஞானி என்றும் முனிவன் என்றும் அழைக்கப்படுகிறான். இன்பங்களை எதிர்பார்த்து ஒருவன் வினையாற்றும் போது அவன் தொடர்ந்து, ஊக்கத்துடன் அவ்வினைகளை மேற்கொள்கின்றான். அந்தத் தொடர்ச்சியும், ஊக்கமும் பயன் எதிர்பார்க்காத வினைகளை மேற்கொள்ளும் போதும் ஒருவனுக்கு அமைய வேண்டும். அதுவே சிறந்த தியானம் எனும் நிலைக்கு இட்டுச் செல்லும். பிறகு தியானமே சிறந்த வினையாகிறது. அது போது அவனிடம் குழப்பம், ஏமாற்றம் மறைந்து ஒழுக்கம், உறுதி, நேர்மை, வினை ஆற்றல், சம நோக்கு, ஒற்றுமை போன்ற புனிதமான பண்புகள் மலரவும் வளரவும் செய்யும். இந்நிலையே அவனை அந்த பரம்பொருளை அறிய வழிவகுக்கும்.]

யதா ஹி நேந்த்ரியார்த்தேஷு ந
கர்மஸ்வனுஸஜ்ஜதே:।
ஸர்வஸங்கல்பஸந்யாஸீ
யோகாரூடஸ்ததோச்யதே:।। (4)

"எப்பொழுதும் வினைப்பயன்களில் பற்றில்லாது, செய்யும் வினையில் (பணியில்) கருத்துக்கொள்ளாது (வினைசெய்கின்றோம் என்ற எண்ணப் போக்கு இல்லாது) எண்ணங்களை (பயன்களைப்பற்றிய பல்வேறு எதிர்பார்ப்பு உணர்வுகள்) விட்டுவிட்டு ஒருவன் திகழும் போதுதான் அவன் யோகாரூடன் என்று அழைக்கப்படுகிறான்."

[யோகப்பயிற்சியில் தேர்ந்தவன் யோகாரூடன் என்று கூறப்படுகிறான். ஒருவன் யோகப்பயிற்சி மேற்கொண்டு, சலனமற்ற சமாதி எனும் நிலையில், அவன் வெளியுலகத் தொடர்புகளிலிருந்து மனத்தளவில் ஏற்படும் உணர்வுகளிலிருந்து விலகுகின்றான். ஓசை, மணம் போன்ற ஐம்புலன்கள் பெறும் விஷயங்களிலிருந்து அவன் விடுதலை பெறுகிறான். வினை, வினைப்பயன், பயன்களால் எதிர்பார்க்கப்படும் அலைபாயும் எண்ணங்கள் ஆகியவற்றிலிருந்து அவன் விலகியிருக்கும் நிலையில் அவன் 'யோகாரூடன்' என்றழைக்கப்பெற்று, அந்த நிலையில் அவன் தன் ஆத்மாவை சுத்தமாக்கிக்கொள்கிறான். அந்த சுத்த ஆத்மாவே அந்த இறைவன் உறையும் கோயிலாக விளங்குகிறது.]

உத்தரேதாத்மனாத்மானம்
நாத்மானமவஸாதயேத்:।
ஆத்மைவ ஹ்யாத்மனோ
பந்துராத்மைவ ரிபுராத்மன:।। (5)

"(ஒருவன்) தன்னைத்தானே மேம்படுத்திக்கொள்ள வேண்டும். தன்னையே தான் இழிவு படுத்திக்கொள்ளக்கூடாது. ஏனெனின் நமக்கு நாமே நண்பன், நமக்கு நாமே எதிரி."

[இறைவன் இம்மண்ணில் எண்ணற்ற உயிர் இனங்களைப் படைத்துள்ளான். அவற்றுள் மனித இனம் மேம்பட்டதாக விளங்குகிறது. ஏன்? எதற்காக இறைவன் அந்த இனத்தைச் சிறப்புள்ளதாகப் படைத்தான்? இன்பம் ஏது துன்பம் எது; பெருமை எது இழிவு எது; உயர்வு எது தாழ்வு எது; நன்மை எது தீமை எது என்று சிந்தனை மூலம் பிரித்து அறிந்து கொள்ளும் பகுத்தறிவை மனிதன் கொண்டதால், அது பிற உயிர்களுக்கு இல்லாததால் மனிதப்பிறவி சிறந்ததாகக் கருதப்படுகிறது. ஒருவனுடைய உயர்வுக்கு தாழ்வுக்கும் அவனே காரணமாகின்றான். பிறரால் தான் கெட்டுப்போகிறோம் என்று கூறினால் அது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதற்குச் சமமாகும். புகைப்படித்தல், மது அருந்துதல் நம் வாழ்நாளைச் சுருக்கும் என்பதை நன்கு அறிந்தும், அதற்கு அடிமையாகிவிடும் மக்கள் அவற்றை விற்பதால் தான் நாங்கள் வாங்கும்படி நேரிடுகிறது என்று கூறி விற்பனை செய்யும் கடைக்காரன் மீது பழிசுமப்பது நகைப்புக்கு இடம் தருவதாகும். "பகைவனும், நண்பனும் வெளியுலகில் இல்லை. நம்மிடம்தான் 'உள்ளனர்" என்பதை அறிபவனே உலகத்தை, இயற்கையை, அந்த ஆண்டவனை அறிந்தவனாகக் கருதப்படுகிறான். தன்னைத் தானே வெறுப்பது, பிறரையும் வெறுக்க வழிசெய்யும்.]

பந்துராத்மாத்மனஸ்தஸ்ய
யேனாத்மைவாத்மனா ஜித:।
அனாத்மனஸ்து சத்ருத்வே
வர்த்தேதாத்மைவ சத்ருவத்:।। (6)

"தன்னைத்தானே வென்றவன் தனக்குத்தானே உறவினன ஆகின்றான். அதே நேரத்து தன்னை வெல்லமுடியாத மனத்தை உடையவன தனக்குத் தானே எதிரிபோனறு பகைமையை தன்னைச் சூழ வழிவகுக்கிறான்."

[யோகப்பயிற்சியில் வெற்றி பெருத அல்லது அப்பயிற்சியினை மேற்கொண்டு வரும் மனிதர்கள் இரு நிலைகளுக்கு உள்ளாகின்றார்கள். உடல், மனம், ஐம்பொறிகள் மூலமாக உள்ளமும், உடலும் சிற்றின்பங்களின்பால் அலைபாய்கின்றன. அதே நேரத்து இறை சிந்தனை ஒருவாறு பெற்று பேரின்பநிலையை அடையவேண்டுமென்ற முயற்சியினை அறிவால் கொள்ளும் நிலை. இரு மாறுபட்ட உணர்வுநிலைகளின் போது, ஒருவன் தன் மனதையும் அறிவையும் கட்டுப்படுத்தும் முயற்சியில் வெற்றி கொள்வானாயின் அவனுடைய மனமே, அறிவே அவனுக்கு உற்ற துணையாகின்றன. நண்பனாகின்றன. அப்போது யோகி எனும் சொல்லுக்குப் பொருளாகின்றான். அத்தகு யோகிக்குரிய பக்குவம் இல்லாதார் ஆசை, பற்று ஆகிய காரணங்களால் புலனின்பங்களால் கவரப்பட்டுத் தங்களுக்குத் தாங்களே பகைவர்களாகின்றனர். ஆம் , பகை, நட்பு அவர்களுடைய மனத்திட்பத்தைப் பொறுத்து அமைகின்றது.]

ஜிதாத்மன: ப்ரசாந்தஸ்ய
பரமாத்மா ஸமாஹித:।
சிதோஷ்ணஸுகது:கேஷு ததா
மானாபமானயோ:।। (7)

"தன்னை அடக்கி, தெளிந்த மனநிலை கொண்டவனுக்கு, குளிர்ச்சி, வெப்பம், இன்பம், துன்பம், புகழ், இழிவு (போன்ற) உணர்வுகளினால தாக்குண்ட நிலையிலும், அந்த இறைவனின் திருக்காட்சி என்றும் கிடைத்திடும்."

[மனிதப்பிறவியின நோக்கம் கிடைத்தற்கரிய, பெறுதற்கரிய, காணுதற்கரிய அந்த பரம்பொருளின் திருக்காட்சியாகும். அதனைத் தூய மனம் கொண்ட, தெளிந்த சிந்தை கொண்ட மனிதர்களால் மட்டுமே பெற முடியும். அதற்கான ஒரே வழி கீழான ஆசைகளை மனதில் ஏற்படுத்திக்கொள்ளாது தன்னைத்தானே வெல்ல வேண்டும். அந்தநிலையில் எவரும் அவனுக்கு பகைவர்களாக இருக்க மாட்டார்கள். பகை, மயக்கம் இல்லாத அந்த மனமே சுத்த ஆதமாவாகும். அதில் இறைவன், கண்ணுடியில் தெரியும் உருவமாகத் திகழக்காணலாம்.]

ஞானவிக்ஞானத்ருப்தாத்மா
கூடஸ்தோ விஜிதேந்த்ரிய:।
யுக்த இத்யுச்யதே யோகீ
ஸமலோஷ்டாச்மகாஞ்சன:।। (8)

"ஞானத்தில், விக்ஞானத்தில் திருப்தி கொண்டு, அலையும் மனம் இல்லாது, புலன்களை அடக்கி, மண், கல், பொன் ஆகியவற்றை வேறுபாடுஇன்றி ஒன்ருகக் காணும் யோகியானவனே சமாதிநிலையை கைவரப்பெற்றவனாவான்."

[இச்செய்யுளில் கூடஸ்தன் எனும் சொல் வருகின்றது. ஐம்புலன்களால் பெறப்படும் உணர்வுகளின் காரணமாக மனத்தை அலைபாயவிடாது, மனத்தை கட்டுப்பாடுமிக்கதாக வைத்துக்கொள்ளக்கூடிய மனப்பக்குவத்தை உடையவனே கூடஸ்தன என அழைக்கப்படுகிறான. அவனது மனம், எது மாறினாலும் மாறாது விளங்கும் ஆகாயத்தைப் போன்று இருக்கும். பக்குவப்பட்ட அந்த மனத்தைக் கொண்டவனாலதான், வெளியே இருக்கும் எப்பொருளைக் கண்டாலும் அவனுள் சலனம் ஏற்படாது. கல்லும் பொன்னும் ஒன்ருகவே அவனுக்குத் தெரியும். அம்மனம் இறைக்காட்சி எனும் இன்பத்தைப் பருகவே விரும்பும்.]

ஸுஹ்ருன்மித்ரார்யுதாஸீன
மத்யஸ்தத் வேஷ்யபந்துஷு ।
ஸாதுஷ்வபி ச பாபேஷு
ஸமபுத்திர்விசிஷ்யதே:।। (9)

"நல்ல மனம் கொண்டவர், நண்பர்கள், எதிரிகள், பொருட்படுத்தாவர், நடுநிலைமை கொண்டவர், வெறுப்பவர்கள், உறவினர்கள், மேலோர் (உத்தம புருஷர்கள்) பாவிகள் ஆகியோரிடத்தும் ஒரே மன இயல்பைக் காட்டுபவரே சிறந்தவர்களாவார்கள்."

[இம்மண்மீது படைக்கப்பட்ட எல்லா உயிர்களும் இறைவனின் கைவண்ணமேயாகும். அவற்றுள் சிந்திக்கத் தெரிந்த மனிதன், தன் சிந்தனைக் கேற்ப பல்வேறு உணர்வுகளை, குணங்களைக் கொண்டவனாகத் திகழ்கின்றான். நல்ல மனம் கொண்டவன் மற்றவர்க்கு நண்பனாக, உதவியாளராக, சுற்றமாகத் திகழ, வெறுப்பு, கோபம் போன்ற தீக்குணங்களால் தாக்குண்டவர்கள் பகைவர்களாகவும், பாவிகளாகவும் விளங்குகின்றனர். ஆனால். இவ்வாறு மனம், சிந்தனை, செயல் வேறுபாடுகள் கொண்ட மனிதர்களையும் ஒன்ருகக் காணும மனிதனே சிறந்த யோகியாகக் கருதப்படுகிருன்.]

யோகீ யுஞ்ஜீத ஸததமாத்மானம்
ரஹஸி ஸ்தித:।
ஏகாகீ யதசித்தாத்மா
நிராசீரபரிக்ரஹ:।। (10)

"யோகியானவன் யார் கண்ணுக்கும் தெரியாது தனியாக இருந்து வந்து, உள்ளத்தையும், உடலையும் அடக்கி, ஆசைகளை அழித்து, (தனக்கென்ற) உடைமைப்பொருள் இல்லாதவனாய், எப்பொதும் மனத்தை அடக்கவேண்டும்."

[இச்செய்யுள் மூலமாக மனித இயல்பு நன்கு விளக்கப்படுகிறது. மனதை அடக்க வேண்டுமென்ருல், எண்ணங்களை திசை திருப்ப வேண்டுமென்ருல், அவன் வேறு பல காட்சிகளில் கருத்து கொள்ள வேண்டும். அப்போது வெளியுலக உறவு அவனுக்கு அவசியமாகிறது. ஆனால் தனிமையில் ஒருவன் இருக்கும்போது, வெளியுலகக காட்சிகளை அவன் காணும் போது, மனதை அடக்குதல் என்பது அவ்வளவு எளிதல்ல. 'மருநது சாப்பிடும் போது குரங்கை நினைத்துக் கொள்ளாதே' என்று அறிவுரை கூறினால், தான் மட்டுமல்ல வேறுயாரேனும் மருந்து சாப்பிட்டால் கூட குரங்கு நினைப்பு தான் ஒருவன் மனதில் தோன்றும். ஆகவே எதனைக் கூடாது என்று கூறுகிருமோ, எண்ணுகிருேமோ அதனைத்தான் பல முறை பலவாறு மனம் அசைபோடும். ஆகவே தனிமையில் மனதை அடக்குதல் மிகுந்த பயிற்சியின் பயனாகத் தான் விளையும். அதற்குமுன்பு உடல் அடக்கம் தேவை. பின்னர் மனஅடக்கம். இவற்றில் தேர்ச்சி பெற்றவனே யோகி யாவர். உடலுக்கு நம் மனதை அடிமையாக்கக்கூடாது. ஆசை அதிகமாகும் அளவு தேவைகளும் பெருகுகின்றன. உயிர்வாழுதற்குரிய அடிப்படை தேவைகள் மட்டுமே ஒருவன் பெறல் வேண்டும். தேவைகள் அதிகமாகும் போது, பொருள்கள் அதிகமாகின்றன. பின்னர் அவற்றைக் காப்பாற்றவும், பெருக்கவும் நம் அறிவு, உடல் கட்டுப்பாடற்று செயல்புரிகின்றன. இதிலிருந்து நம்மைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமென்ருல் போதும் என்ற மனப்பான்மை நம்முள் வளர வேண்டும். மேலும் நம்மிடம் இருக்கும் பொருளையும் நம்முடையது என்று கருதுதல் கூடாது. 'நான்' 'எனது' என்று எண்ண ஆரம்பித்தால், பழைய படி 'மனம்' மாசுபடும்.]

(தொடரும்)



ஸ்ரீமஹாநந்தீஸ்வரசுவாமி கோயில்-மகாநந்தி (ஆ.பி.)

# சித்தவடமடமும் திருவடித் தீட்சையும்

திரு. வ. ஜோதி - புதுப்பேட்டை.

மண்ணின துகளாகிய தூசியே அனறி வேறு துகளாகிய குற்றம் ஒனறும் இலலாத நாடு திருமுனைபபாடி நாடு. இதனை நடுநாடு எனறும்; சேதிநாடு எனறும் வேறு பெயர்களால் வழஙகுவர். இநத நடுநாட்டிலபுகழ மிககப் பல திருத்தலங்கள உளளன. திருவெணணை நல்லூர, திருத்துறையூர, திருப்பாதிரிப்புலியூர, திருவதிகை, திருநாவலூர் போன்ற திருத்தலங்களில அமைநத கோயில்கள் மிகவும் புகழ்மிககவை. இதில் திருவதிகைக்கு மேல்பால் சுமார் ஐந்து கிலோமீட்டர் தொலைவில் அமைநதுள்ளது 'சித்தவடமடம்' என்னும் தலம் ஆகும.

எழுத்துககள எல்லாம் அகரத்தை முதலாக உடையன. அதுபோல் உலகம் ஆதிபகவனை முதலாக உடையது என்பது வள்ளுவர்தம் வாய்மொழி. அதனாலேயே அது தமிழ்மறை என்று போற்றப் படுகின்றது. ஆதிபகவன் என்பதற்கு முதற்கடவுள் என்பது பொருள். அம்முழுமுதற் கடவுள் சர்வ சங்கர காரணன் ஆகிய சிவபெருமானே எனபது சைவ சித்தாந்தம்.

இவ்வுலகில் தோனறி மறைந்த ஜீவன்கள அநேகம். அதில் கிடைததறகரிய பிறவி இம்மாநிடபபிறவி. இவவரிய பிறவியில் உலக இனபங்களில மூழ்கி விடாமல பிறவிக்கு இடமாய மலங்களைத தேயதது, காயம் அழிந்து, பின பரமுத்தராய சிவப்பேறு பெறறவர் பலர்.

அததகைய சிவபபேறு பெறறவரகளே பெரிய புராணதது வரலாற்று அடியவரகள. அவரகளுள சைவ சமயக் குரவர எனறு போறறப்படுவர நாலவர். திருஞானசம்பநதர, திருநாவுக்கரசர, சுநதரமூரததி நாயனார, மாணிக்கவாசகர ஆகியோரே அந்நால்வர். இந்நால்வரில் முதல் மூவரை 'மூவர் முதலி' என்று ஆன்றோர் அழைப்பர். இம்மூவர் பாடியவைகள் தேவாரங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

"மூவாத பேரன்பின் 'மூவர் முதலி'களும்
தேவாரஞ் செய்த திருப்பாட்டும்"

என்று ஏகாம்பரநாதர் உலாவில் இரட்டைப் புலவர்களின கூற்றாக அமைகிறது. இம்மூவரில் திருநாவுக்கரசரும், திருஞான சம்மந்தரும் சமகாலத்தவர். அவர்களுக்குப் பின்னால் சுமார் ஒரு நூற்றாண்டிற்குப் பின் தோன்றியவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

இம்மூவரில் சுநதரமூர்ததி சுவாமிகளே இறைவனைத் தோழமை நெறியில் பெரிதும் உரிமையோடு நெருங்கிப் பழகும வாயப்புடையவர். இவர் நெறி யோக மார்ககததைச் சார்நதது. இவருடைய பாடல்கள் அனைத்தும் அததிறத்தில் அமைந்திருபபதைப் பாடலைப் படிககும்போது வெளிப்படையாகவே உணரமுடியும.

அததகைய சுநதரமூரததிப பெருமான ஒருநாள இரவு தஙகும பேறு பெறறது சித்தவடமடம எனனும திருததலம் ஆகும. அநநாயனாரின திருமுடியில இறைவன திருவடி சூட்டபபடடது இததிருததலதிலதான். இதனைச சுநதர மூரததி சுவாமிகள தம் பாடலகளில் அருமையாக அமைததுப்பாடுகினறார். 'விருததனும, பாலகனும் ஆகிய இறைவனை சித்தவடமடததில் யான் என் கனவில் என அருகே கண்டு, நனவில் எங்கும் காணமாட்டாதுப் பிரிந்திருநதேன்' எனறு கூறுகின்றார்.

"விருத்தனை பாலகனைக்
கனவிடை விரவி
விழித்து எங்கும் காண
மாட்டாது
விட்டிருந்தேன்.................

என்கிறார். இச்சித்தவடமடததில் கோயில் கொண்டுள்ள இறைவனின் பெயர் சிற்றம்பலநாதர். சிதம்பரேஸ்வர் என்றும் அழைப்பர். இறைவி சிவகாமசுந்தரி அம்மையார்.

தென்னாற்காடு மாவட்டத்தில் பண்ருட்டிக்கு அடுதத புதுப்பேட்டை கோட்டலாம்பாககத்தில் இச்சித்தவடம் அமைநதுள்ளது. இச்சித்தவடமடம் காப்புத திருததலங்களில் ஒன்று என்பதை 'அபபர்'தம் திருவாக்கால் உணர முடிகின்றது. காப்பு எனபது காவல் புரிவது எனறு பொருளபடும். காபபுத திருத்தாணடகம் பன்னிரெண்டாம பாடலில 'திருநீர் புனற்கெ

டில வீரட்டமும், திருவளப்பூர் தெற்கேறு சித்தவடம்', என்று அவர் குறிப்பிடுகின்றார்.

இந்த உலகில் சித்தர்கள் வெவ்வேறு காலங்களில் வாழ்ந்தார்கள். அவர்கள் இன்னும் வாழ்வதாக ஒரு நம்பிக்கையும் உள்ளது. அவர்களுடைய ஜீவ சமாதி உள்ள தலங்கள் மிக மிக மேம்பாடுடைய தலங்கள் என்று இன்றும் கருதப்பட்டு வருகின்றன. காடுகள் நிறைந்த தென்னார்க்காடு பகுதியில் சித்தர்கள் மிகுதியும் வாழ்ந்திருந்தனர். அவர்களின் பெயர்களைத் தாங்கிய ஊர்கள் இன்றும் பல உள்ளன. சித்தலிங்கமடம், சித்தாமூர் போன்றவற்றைக் குறிப்பிடலாம். அவ்வரிசையில் அமையப்பெற்றது சித்தவடம் ஆகும்.

பொதுவாய் நம் நாட்டுத் திருத்தலங்கள் அனைத்தும் சித்தர் ஒருவர் வாழ்ந்துப் பின்னர் அவர் பொருட்டுத் தோற்றுவிக்கப்பட்டது என்றே சில அறிஞர்கள் கருதுகின்றனர். வடம் என்பதற்கு ஆலமரம் என்பது பொருள். முற்காலத்தில இத்தலத்தின் விருட்சம் கல்லால மரமாய் இருந்திருக்கலாம். பின்னாளில் இங்கு ஒரு மடம் கட்டப்பட்டு 'சித்தவடமடம்' என்ற காரணப் பெயரைப் பூண்டது போலும்.

சித்தவடம் என்ற பெயரும் ஆய்விற்குரியதே. ஏனெனில் சித்தர் வாழ்ந்ததாலே தான் இப்பெயர் பெற்றதா? அன்றி வேற காரணம் உண்டா? என்பது போன்றவையும் சிந்திக்க வேண்டிய ஒன்று.

ஏனெனில் சித்தன் என்ற சொல் சிவபெருமானைக் குறிக்கும் சொல். சித்தன் என்பதற்கு நேரடியாகச் சிவன் என்றே அகராதிகள் பொருள் உரைக்கின்றன. சேலம் கஞ்ச மலையில் உள்ள சிவபெருமானைச் சித்தேஸ்வரன் என்றே அழைக்கின்றனர். எனவே சிவன் கோயில் கொண்டுள்ளதும், ஆலமரத்தைத் தல விருட்சமாகக் கொண்டதுமான இக்கோயில் சித்தவடம் என்று அழைக்கப்பட்டிருக்கலாம்.

மேலும் சித்தி என்ற சொல்லிற்கு நற்பேறு, நல்வாய்ப்பு என்ற பொருள்களும் உண்டு. இங்குக் குடிகொண்டிருக்கும் இறைவனை அடைந்தவர் நற்பேறு அடைவர் என்ற கருத்தில் முதலில் 'சித்தி அடைமடம்' என்பதாய் இருந்துப் பின்னர் 'சித்தவடமடம்' என்றும் மாறி இருக்கலாம்., எனினும் இக்கருத்திற்கு அரண் செய்யும் ஆதாரங்கள் ஒன்றும் கிடைத்தில. இருப்பினும் சித்தவடம் என்ற பெயர் நாவுக்கரசர் காலத்திற்கும் முற்பட்ட பெயர்க்காரணம் என்பதில் ஐயமில்லை.

மணம் தவிழ்ந்த புத்தூர் வரலாறு நாடறியும். அங்கு இறைவனால் தடுத்து ஆட்கொள்ளப்பட்ட சுந்தரமூர்த்தி சுவாமிகள் 'பித்தா' எனத்தொடங்கும் பாடலைப் பாடி பதிகத்தை முடித்தார். பின்னர் அவ்வூரை விட்டுப் புறப்பட்டார். திருத்துறையூரை அடைந்து அங்குள்ள இறைவனைத் தரிசித்து விட்டு திருவதிகையை நோக்கிப் புறப்பட்டார். திருவதிகை திருநாவுக்கரசரால் உழவாரத் திருப்பணி செய்யப்பெற்ற தலம். ஆதலால் சுந்தரர் அதனை மிதித்துச் செல்ல விரும்பவில்லை எனவே அருகில் உள்ள ஊரான சித்தவடமடத்தில் தங்கினார். இதனை சேக்கிழார்,

"உடைய அரசு உலகேத்தும்
உழவாரப் படையாளி
விடையவர்க்குக் கைத்தொண்டு
விரும்பும் பெரும்பதியை மிதித்து
அடையும் அதற்கு அஞ்சுவன்
என்று அந்நகரில் புகுதாதே
மடைவளர் தண்புறம்பே அணையினற்
சித்தவடமடம் புகுந்தார்
[பெரிய-82]

அச்சித்த வடத்தில் வீரட்டானத்து இறைவனுடைய பாதங்களையே இடையறாது சிந்தித்த வண்ணம் துயின்றார். இன்னும் சில அடியார் கூட்டமும் இவருடன் துயின்றனர். அவ்வாறு துயின்றபோது இறைவர் முதிய அந்தணர் வடிவம் கொண்டு ஒருவரும் அறியாதபடி அச்சித்தவட மடத்தினுள் புகுந்தார். சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தலையின் மேலே தம் திருவடி படும்படியாக வைத்துத் தாமும் துயில் கொள்வாரைப் போலப் படுத்திருந்தார்.

உடனே சுந்தரமூர்த்தி விழித்து எழுந்தார். "அருமறையோனே! உன் அடிகளை என் தலைமேல் வைத்தனையே!" என்று கேட்டார். உடனே முதியவர், "நீர் துயிலும் திசையை அறியாது காலை வைத்தது என் மூப்பினால் நேர்ந்தது", என்றார். உடனே சுந்தரமூர்த்தி வேறு திசையில் தம் முடியை வைத்துத் துயில ஆரம்பித்தார்.

மீண்டும் அம்முதியவர் சுந்தரமூர்த்தியின் தலையின் மேல் படும்படியாகத் தம் திருவடிகளை நீட்டியருளினார். உடனே

(36-ஆம் பக்கம் பார்க்க)

(சிறுவர் பகுதி)

உலகில் ஐந்து கண்டங்கள் உள்ளன. அவைகளில் உயர்ந்தது ஆசியாக் கண்டம். காரணம்? உலகம் உய்ய வழி காட்டியுள்ள மெய்கண்டார், ஆதிசங்கரர், புத்தர், இயேசு, நபிகள்நாயகம், குருநானக், இராமாநுசர் முதலான மார்க்க தீர்க்கதரிசிகளான மத குருமார்கள் அவதரித்தது ஆசியாக் கண்டத்தில் தான்.

ஆசியாக் கண்டத்தில் உயர்ந்தது நம் பரத கண்டமாகும். மண்தோன்றி கல்தோன்றிய காலந்தொட்டு உலகில் பிறந்த மக்கள் எங்ஙனம் வாழ வேண்டும் என்பதற்கு வேத புராணச சாத்திர வழிபட வழிகாட்டிய உயர்வான சமயாச்சாரியர்களைப் பெற்ற அருமையும் பெருமையுமான நாடு தென்னாடுதான். இப்புண்ணிய மண்ணில் அவதரித்த நமது சைவ சமய ஆச்சாரியர்கள் நால்வர்கள், பன்னிரு ஆழ்வார்கள், சந்தான குரவர்கள் நால்வர். பட்டினத்தார், இராமாநுசர், அருணகிரியார், தாயுமானவர், இராமலிங்க அடிகளார் போன்ற ஒப்பற்ற உயர் குரு மணிகளை உலகில் வேறு எந்நாடும் பெறவில்லை. எனவேதான் "தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்னும் நல்லுயர்வை மகான் மணிவாசகப் பெருமான் இத்தென்னாட்டிற்கு வழங்கியுள்ளார்.

"தாயிற் சிறந்தொரு
கோயிலு மில்லை"
"தாய்சொல் துறந்தால்
வாசகமில்லை"

என்றுரைத்தவரும் அவரே.

தாய் தன் பிள்ளைகளுக்காகத் தன்னையே சர்வபரித்தியாகம் செய்வாள்.

"பாலுண் குழவி பசுங்குடர்
பொறுக்கென
நோயுண் மருந்தைத்
தாயுண் டாங்கு"

என்று குமரகுருபரர் கூறுவார். பட்டினத்துப் பெருமானோ,

"முந்தித் தவங்கிடந்து முந்நூறு
நாள்சுமந்து
அந்திபக லாய்ச்சிவனை
ஆதரித்துத் - தொந்தி
சரியச் சுமந்துபெற்ற தாயார்"

# நன்மை பயக்கும் நால்வர்

திருமுருக. கிருபானந்தவாரியார் அவர்கள்

வழிகளை வகுத்தும், தொகுத்தும் வழிகாட்டிய மகரிஷிகளும் மகான்களும், அறிஞர்களும், கவிஞர்களும், முக்தர்களும், சித்தர்களும், மகாசிற்பிகளும், மேதைகளும் தீரர்களும், வீரர்களும், மனுநீதி மன்னர்களும், நீதிநெறியாளர்களும் தோன்றியது புண்ணியபூமியான நம் பரத கண்டத்தில்தான்.

பரத கண்டத்தில் மிகச் சிறந்த பொன்னாடு தென்னாடுதான். மக்கள் பண்பாடு மலர, ஆசார சீல அறவொழுக்கங்கள் உயர நாகரிக நற்பழக்கங்கள் வளர, சான்றாண்மை, சன்மார்க்க நெறிகள் சிறக்க ஆகம சாத்திர ஆலய வழிபாட்டு முறைகளை அமைத்து நாடெங்கும் தெய்வ பக்தி விளங்க, மக்கள் நல்

எல்லா உலகமும் ஒன்றென எண்ணும் ஏற்றமான ஒருமையுள்ளம் படைத்தவர் நம் மணிவாசகப் பெருமான். இப்பெருமான் தென்னாட்டின் சிறப்பை உணர்த்தியுள்ளது சிந்திக்கத்தக்க சிறந்த சான்றாகும். மேலும் வானளாவிய திருக்கோயில் கோபுரங்களும் தேனளாவிய தமிழ்த் திருமுறைப் பாடல்களும், புண்ணியத்தலங்களும் கண்ணியமாக நிறைந்ததால் தென்னாடு மேன்மையாக விளங்குகின்றது.

மாதா

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பார் அறிஞர் மேதை ஒளவைப் பிராட்டியார்.

"ஐயிரண்டு திங்களாய் அங்க-
மெல்லாம் நொந்துபெற்றுப்
பையலென்ற போதே பரிந்தெடுத்துச்-
செய்யஇரு
கைப்புறத்தி லேந்திக்
கனகமுலை தந்தாள்"

வட்டிலிலும் தொட்டிலிலும்
மார்மேலும் தோள்மேலும்
கட்டிலிலும் வைத்தென்னைக்
காதலித்து - முட்டச்
சிறகிட்டுக் காப்பாற்றிச்
சீராட்டுந் தாய்"

என்றெல்லாம் பாடுவார்.

தன்பிள்ளைகள் நன்கு வளரவேண்டும்; கற்றுத் தெளிய வேண்டும்; எல்லா நலன்களும் எய்த வேண்டும்; அதனால் பேரும் புகழும் பெற்று இன்புற்று வாழ வேண்டும்

என்னும் ஆர்வம், அன்னைக்கு உள்ளதைப் போன்று அகிலத்தில் வேறு எவர்க்கும் இல்லை.

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும்
தன் மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்"
--திருவள்ளுவர்

மேலும் இந்த உலகில் முதலில் கண்கண்ட தெய்வமாக விளங்குபவள் மாதாதான்.

ஆசிரியரை விடப் பத்து மடங்கு அதிகம் ஆசாரியன் (உயிர் நற்கதியடைய தீட்சை தரும் சமய குருநாதர் ஆசாரியன்) ஆசார்யனைவிட நூறு மடங்கு அதிகம் தந்தை. தந்தையைவிட ஆயிரம் மடங்கு அதிக மகத்துவமும் பெருமையும் உடையவள் தாய்.

இணையில்லாத இன்ப அன்புக்கு உரியவள் மாதாவாகும். அவரின் பெருமையை இராமலிங்க வள்ளலார் பின்வருமாறு பாடுகின்றார்.

வன்மை யறப்பத்து மாதஞ்
சுமந்துநமை மன்னுலகில்
நன்மை தரப்பெற்ற நற்றாய்காண்
மூளும் பெருங்குற்றம்
முன்னிமேன் மேற்செயினும்
நாளும் பொறுத்தருளும் நற்றாய்-
காண் - மூளுகின்ற
வன்னெறியிற் சென்றாலும்
வாவென் றழைத்துநமை
நன்னெறியிற் சேர்க்கின்ற
நற்றாய்காண்-
காலம் அறிந்தே கனிவோடு
நல்லருட்பால்
ஞான மிசையளிக்கும் நற்றாய்
காண்
வெம்பிணியும் வேதனையும்
வேசறிக்கை யுந்துயரும்
நம்பிணியும் தீர்த்தருளும்
நற்றாய்காண்
வாடியழு தாலெம் வருந்தந்
தரியாது
நாடி எடுத்தணைக்கும்
நற்றாய்காண்"



இத்தகைய தாயின் மனம் நோவாது அவர்கள் இடும் கட்டளைகளை நிறைவேற்றி நடந்து கொளவதுதான் முதல் முக்கியமான கடமையாகும். மாதாவின் மனம் நோகும் எதனையும் மக்கள் செய்யலாகாது.

"தாயை அழவிடாதீர்கள்
ஏனெனில், அவள்
கண்ணீரை ஆண்டவன் எண்ணிக்
கொண்டிருக்கிறான்"

என்று ஓர் அறிஞர் கூறியிருப்பது இங்கு நினைவு கூரத்தக்கது.

## தந்தை

"சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே" என்றும் "தந்தையோடு கல்விபோம்" என்றும் மேலோர் கூறியுள்ளதைக் கூர்ந்து நோக்குங்கள்.

"தந்தை மகற்காற்றும் நன்றி
அவையத்து
முந்தி யிருப்பச் செயல்"

என்ற வள்ளுவப் பெருமானின் வாய்மைக்கேற்பத் தன்மகனைப பேரறிஞனாக்கிப் பிறர் போற்றும் வித்தகமிக்கவனாக விளங்க வைப்பது தந்தையின் கடனாகும்.

"வேண்டு தந்தை விதிப்பினுக்
கஞ்சியான்
வீதி யாட்டங்கள் ஏதிலுங்
கூடிலேன்

தூண்டு நூற்களைத் தேடு
தனியனாய்த்
தோழமை பிறிதின்றி"

வந்ததிப் படித்ததாகப் பாரதி யார் தம் வாழ்க்கை வரலாற் றில் வரைவார்.

அவ்வாறு தந்தை கண்டிப்ப தும் தண்டிப்பதும் நம் நன் மைக்காகவே என்பப் பிள்ளை கள் எண்ணவேண்டும். விளை யாட்டுப் பருவமாக இளமைக் காலத்தை வீணே கழிக்கலா காது. அப்படி இளமைக் காலத்தை வீணுகப் போக்கிய வன் பிற்காலத்தில் பெரிதும் வருந்த நேரிடும் என்பதைப் பின்வரும் பாடலால் அறிக.

"அள்ளிக்கொடுக்கின்ற செம்பொன்னும்
ஆடையும் ஆதரவாக்
கொள்ளிக்கும் கொண்ட கடனுக்கும்
என்னைக் குறித்ததல்லால்
துள்ளித் திரிந்திட்ட காலத்தி
லேயென் துடுக்கடக்கிப்
பள்ளிக்கு வைத்தில னே,தந்தை
யாகிய பாதகனே"

பெற்றோரைவிடப் பிள்ளை அறிவுடையவனாக விளங்குதல் வேண்டும்.

"பிதுச் சதகுணம் புத்ர" என் பது ஆன்றோர் வாக்கு. அது படி மகன் குணம் பெருகும் கோமானாக வளர வேண்டும்.

தந்தை கலெக்டராக இருந் தால் மகன் பில்கலெக்டராக வரக்கூடாது. தந்தையினும் பெரிய தகுதியைப் பெற வேண் டும். அப்போதுதான்,

"இவன் தந்தை என்னோற்றான்
கொல்லெனும் சொல்"

என்னும் பொதுமறையின் கருத்து பொலிவுபெறும்.

ஆகவே, தந்தையிடும் உத் தரவுகளைத் தலைமேல்தாங்கி, அவர் உள்ளம் உவக்குமாறு நடந்து பயில வேண்டும். ஏனெ னில் "தந்தை சொல் மிக்க மந் திரம் இல்லை" என்றே!

"தாயாகித் தந்தையுமாய்த்
தாங்குகின்ற தெய்வம்"
--வள்ளலார்.

## குரு

"எழுத்தறிவித்தவன் இறைவ னாகும்" என்னும் குரு வாக் கைப் பெருவாக்காக எண்ணி, ஆசிரியரிடம் அன்பும் அடக்க மும் செலுத்திவர வேண்டியது மாணவர்கள் கடமையாகும்.

உடலை வளர்க்க உதவிய வர் பெற்றோர். அறிவை வளர்க்க உதவியவர்கள் ஆசிரி யர்கள். உணவு செரிக்கும் வரை யிலும் உடல் மரிக்கும் வரை யிலும் உதவும். ஆனால், ஆசி ரியரால் கல்வி பெற்றவன் பயன் பிறப்புக்கள் தோறும் தொடர்ந்து துணை செய்யும்.

செல்வம் ஒரு காலத்தில் சிதை யும். கல்விச் செல்வம் கற்குந் தோறும் ஊற்றெனச் சுரக்கும்.

அறிவு வளர்ச்சிக்கும், தெளி விற்கும் அடிப்படைத் துணை யாக அமைந்திருப்பது ஆசிரி யர் புகட்டும் கல்விப் பயிற்சி த்தான்.

கல்விக்குத் தொடர்பானது அறிவு; அறிவுக்குத் தொடர் பானது உடல், உடலுக்குத் தொடர்பானது உயிர். உயிருக் குத் தொடர்பானவர் ஆண்ட வன். இந்த ஆண்டவனைக் கல்வியறிவினால் உணர்த்துப வர் ஆசிரியர் (குரு) ஆகவேதான் ஆன்றோர்கள் ஆசிரியரைச் சர் வத்துக்கும் காரணமாக விளங் கும் ஆண்டவனுக்குச் சமமாக அறிவித்துள்ளார்.

"ஸ்ரீ குரு: ஸாக்ஷாத் காரண பூதா சக்தி
--பாவனோபநிஷத்

குரு அஞ்ஞானத்தை நாசஞ் செய்பவன் என்பது பொருள். நன்னெறியினைத் தானும் கடைப்பிடித்துத் தன்னை அண்டிவரும் மாண வனையும் நன்னெறியில் நிறுத் துபவனே குரு எனப்படுகிறான்.

வேதாத்யயனம் செய்தவனா யும், துவேஷமில்லாதவனாயும் மந்திரமறிந்தவனாயும், ஆசிரிய பக்தியுடையவனாயும், விசேஷ மாய்ப் புராணங்களைப் படித்த வனாயும், ஒருவிதப் பயனை யும் கருதாமல் போதிப்பவனா யும், பணத்திற்காகவோ, புகழுக் காகவோ, பெயருக்காகவோ கற் பிக்காமல், சீடனிடம் கருணையி னால் மட்டும் உபதேசிப்பவனாக இருப்பவனே குரு எனப்படுகி றான்.

குருக்களில் இருவகையுண்டு. (1) காரிய குரு (2) காரண குரு.

தம் வாழ்வின் காரணமாக சமய தீட்சை, சரியை, கிரியை யோகங்களைப் பற்றிய போத னைகள் கர்ம காண்ட விதிப்படி ஏற்பட்டுள்ள சடங்குகள் ஆகிய வற்றைச் செய்பவரே காரியகுரு எனப்படுவார்.

ஒரு கைம்மாறும் கருதாது கருணையால் நமது அறியா மையைப் போக்கி ஞானத்தைத் தந்து பிறவிப் பெரும்பணியைப் போக்குபவரே காரணகுரு எனப் படுவார்.

பாகவதத்தில் சுகப்பிரம்மரிஷி பரீட்சித்து மன்னனுக்கு அருளி யது.

"வாக்கி னைக்கடந் தோக்கிமற்
றெங்கணும்
நீக்க மின்றி நிறைந்த அறிவினை
ஊக்க முற்றுணர் தற்கிட
னாதலின்
ஆக்கை யுங்குரு வாயது அரசனே"

'மானிட தேகமே முத்தி அடைவதற்கு அனுகூலமானது. இறைவனை ஊக்கத்துடன் உற்று உணர்வதற்கு இத்தேகம் இடனாயிருத்தலின் இதுவும் குருவுககு ஈடானது' என்பது இப்பாடலின் பொருள்.

"உடம்மை வளர்த்தேன்; உயிர் வளர்த்தேனே"--திருமந்திரம்.

ஆகவே, மாணவர்கள் ஆசிரியரின் உயர்ந்த பண்பு நெறிகளை எண்ணி, அவரிடம் அன்பும் அடக்கமும் குருபக்தியும் வைத்துப் போற்றிவர வேண்டும்.

பக்தியில்லாத பூஜையும், அரசனில்லாத நாடும், தானஞ் செய்யாத கைகளும், விசுவாசமில்லாத சிநேகமும், விபூதியில்லாத நெற்றியும் விரும்பத்தக்கவையல்ல. அதேபோல, குருநாதனில்லாத மாணவனும் நற்கதி சேரமாட்டான்.

ஆற்றைக் கடக்க வேண்டுமென்றால் படகோட்டுபவனைக் கொண்டுதானே கடக்க வேண்டும்.

துருவாசர் முதலானோர விதுரனிடத்தில் ஞானோபதேசம் பெற்றார்கள் என்றும், திருத்துறையூரிலிருந்த சகலாகம பண்டிதரென்னும் அருணந்தி சிவாசாரியார் திருவெண்ணெய் நல்லூரிலிருந்த மெய்கண்ட தேவரிடத்தில் ஞானோபதேசம் பெற்றார் என்றும் பாரத, பாகவ, சைவப் புராணங்களிலிருந்து அறிகிறோம்.

நல்ல நூல்களை உழைத்துப் படிக்க வேண்டும். உயர்ந்தோர் இணக்கம் வேண்டும். ஆசிரியருக்குப் பிணிவிடை செய்ய வேண்டும். இவையெல்லாம் செய்யாது, ஞானமும் கல்வியும் பெற வேண்டுமென்றால் ஒரு பெண். தன் கணவனைக் கொன்றுவிட்டு பிள்ளை வரம் கேட்ட கதை போலாகும்.

"முந்துநூல் உழைப்பும் இன்றி
முத்தர்பால் இணக்கம் இன்றிச்
சுந்தரக் குரவன் பாதத்
தொழும்புகள் சிறிது மின்றி
அந்தமில் ஞானம் வேண்டும்
அவாவெலாம், கொழுநற் கொன்று
சந்ததி வேண்டி நோற்கும்
தன்மையோ டொக்கு மன்றே"

என்பது பதிபசுபாச விளக்கம்.

ஒருவன் தனித்துப் படிப்பதால் புத்திநுட்பம் பெறலாமே தவிர ஞானம் பெற முடியாது. நல்லாசிரியன் ஒருவனை நாடிப் பெறும் கல்வியே ஞானத்தை எளிதில் பெற்றுத் தரும்.

அத்தகைய ஆசிரியரை அடைந்தவர்கள்,
தம்முடைய உடலாலும் மனத்தாலும் பொருளாலும் வாக்கினாலும் அவருக்குத் தொண்டு புரியவேண்டும்.

அதாவது, ஆசிரியன் கட்டளையை மீறாமல் நடப்பது உடலால் செய்யும் தொண்டாகும்.

ஆசிரியரின் வடிவத்தையே தியானித்திருத்தல் மனத்தால் செய்யும் தொண்டாகும்.

"தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே" - திருமூலர்.

ஆசிரியருக்குக் கைப்பொருளைக் காணிக்கையாகத் தருவது பொருளால் செய்யும் தொண்டாகும்.

"உற்றுழி உதவியும் உறுபொருள்
கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது
கற்றல் நன்றே" - புறநானூறு

ஆசிரியரின் குணநலன்களைப் புகழ்ந்து சொல்லுதல் வாக்கினால் செய்யும் தொண்டாகும்.

மேலும் ஆசிரியரைக் கண்டதும் அன்பு பெருகும் உள்ளத்தோடு கைகுவித்து வணங்க வேண்டும்.

"ஆசானைக் காண்தோறும்
அன்புருகக் கைகுவியும்"
--சிவஞானப்பிரகாச வெண்பா

ஆசிரியரிடம் பணிவுடன் நடந்துகொள்ள வேண்டும். அல்லாது அவரைப் பழித்துப் பேசக்கூடாது. ஆசாரியரை 'உம்' என்று அதட்டிக கூறியவர், பிணம் சுடுகின்ற சுடுகாட்டில் மரமாக முளைத்து நாய், நரி, கழுகுகளுடன் ஒன்றாக இருக்க நேரிடும் என்றுரைக்கப்படுவதைப் பின்வரும் பாடலால் அறிக.

குருவை உம்மெனக் கூறுவர்...
எரிசுட லையிற்பெருந் தருவாகி
யேயிருந்து
திரிகழுகுகள் முதலன சேரவா ழுவரே.
--ஆத்ம புராணம்

இன்னும், ஆசாரியன் மனம் நோவச் செய்தவர்கள், ஊரினில் நாயாகவும் யுகாந்திர காலம் புழுவாகவும் மண்ணில் கிடக்க நேரிடும். இக்கருத்துக்கள் அடங்கிய திருமூலரின் திருவாக்கிலிருந்து வெளிவந்த அமுதப்பாடல்களை என்றும் நெஞ்சில் நிறுத்திக் கொள்ளுதல வேண்டும்.

"ஓரெழு தொருபொருள்
உணரக்கூறிய

சீரெழுத தாளரைச் சிதையச்
செய்தோர்கள்
ஊரிடைச் சுணங்கனாயப் பிறந்து
சோரர்கள்
பாரிடைக் கிருமியாயப் படுவர்
மண்ணிலே"

மந்திரம் ஒன்றே உரைசெய்த
மாதவர்
சிந்தையில் நொந்திடத் தீமைகள்
செய்தவர்
பிந்திச் சுணங்களாய்ப்
பிறந்தொரு நூறு
வந்து புலையராய் மாய்வர்
மண்ணிலே
--திருமந்திரம்

## தெய்வம்

தெய்வம் தொழுக, ஏன்? உடலை வளர்கக உதவியர் பெற்றோர். அறிவை வளர்கக உதவியிர் ஆசிரியர். உயிரை வளர்க்க உதவுபவர் ஆண்டவன். ஆண்டவன் அருளில்லாமல் இவ்வுலகில் எவ்வுயிரும் வாழமுடியாது.

பெற்றோர், ஆசிரியர் முதல் பூவுலகில் வாழும் அத்தனைப் பேரும ஆண்டவன் அருளால் வாழ்பவர்களதாம். இல்லை என்பவர்களும் இறைவனருளால் தான் வாழகின்றார்கள்.

எலலா உலகிலுள்ள உயிர்களும் வாழ, உயிர், உடல், உண்ண உணவு, உடை, உலவ பூமி, நீர், நெருப்பு, காற்று, வெளி ஆக அனைத்தையும் அருளோடு வழங்கியுள்ளவர் ஆண்டவனே.

இதறகாக ஆண்டவன் உயிர்களிடம எவ்விதப் பயனையும் எதிர்ப்பார்க்கவில்லை. அவர் விருமபுவதெல்லாம் எல்லாரும் அறநெறி ஒழுககத்தில் வாழ்ந்து இன்புறறிருகக வேணடும என்பதே.

ஆகவே, அனைத்துககும ஆதாரமாகவுள்ள ஆணடவனை கைமமாறு கருதாமல நமககுக கருணை புரிந்து வருகினறார். அவரது ஆதரவைப பெறுகினற நாம, நனறிககாகவாவது நித்தமும அவரை வணஙகக கடமைபபட்டுளளோம என்பதனை என்னருமை மாணவ மணிகளே மறவாதீர்கள்.

மேலும் சிந்தியுங்கள.

நாம் பயிலும் கல்வியின எழுத்துக்கள் 'அ' எனனும் எழுத்தையே முதலாகக கொணடு தொடங்குகின்றன. எல்லா மொழிகளுக்கும் இந்த நியதி தான.

ஆகவேதான், அகில உலக அறிஞர்களும் போற்றும் அறிஞர் மேதை நம் தமிழ்த்திரு தவ முனிவரான திருவள்ளுவர் தம தமிழ்மறையின் தொடக்கத்திலே

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு."

என்றார். அதாவது எழுத்துக்கள் எல்லாம் 'அ' முதலாகக் கொணடு விளங்குவது போன்று, உயிர்களாகிய நாமும் ஆண்டவனை முதலாகக்கொண்டு வாழ்ந்து கொண்டுள்ளோம் என்பதனை விளககியுள்ளார். அடுத்து நாம் பயிலும் கல்வியின் பயன் என்ன என்பதனையும்,

"கற்றதனால் ஆய பயன்என்கொல்?
வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

என்னும் குறள்வழி விளககுகின்றார். அதாவது கல்வி கற்றதன பயன் கடவுளை வணங்குவதே என அறிவுறுத்தியுள்ளார்.

இதுமட்டுமன்று கவலையே நிறைந்த உலகவாழ்வில் கட்டுண்டு கிடக்கும மனிதனே! நீ கவலையற்று இருகக வேணடுமா? இதோ கூறுகிறேன கவனி.

"தனக்குவமை இலலாதான
தாள்சேர்ந்தார்க் கலலால
மனக்கவலை மாற்றல் அரிது"
என வாலறிஞர விளககம் வழஙகியுள்ளார.

எனவே, என்னருமை மாணவ மணிகளே! நீஙகள எநதத் தவறு புரியினும், கடவுள இலலை என்னும் பெருந்தவறை மட்டும புரியாதீர்கள. இலலை என்று கூறுபவர் எத்துணைப் பெரிய வராக இருப்பினும் அவரகளைச சாரந்து நிறகாதீர்கள. நினறால நன்றி கொல்வதாகும.

தெய்வத்தைத் தினந்தினம் பகதி சிரத்தையுடன் வழிபட்டு வாழ்க்கையில் முன்னேற்றமடைந்து மகிழ்வீர்களாக.

"தெய்வம் இகழேல்" - ஔவையார்.

நன்றி: கே. தீபா-சென்னை-11.



ஸ்ரீ, திரு, இலட்சுமி என்னும் சொறகள் திருமகளைக குறிப்பனவாகும.

திருமகள் அனபுககும், அழுககும், ஆககததிறகும உரிய தெயவம

இருககு வேததத்ில இலககுமி எனனும் சொல திரு என்னும பொருளில் வநதிருபபதாகும.

அதர்வண வேததத்தில் நலந் தரும் தெய்வமாகக் குறிப்பிடப் பட்டுளளதோடு தீங்கிழைக்கும் தெய்வமான இரண்டு பெண் தேவதைகளாக உருபபெறுகினறது.

தைத்திரிய சமஹிதையில் இலக்குமி, திரு என்னும் இருவரும் ஆதித்தன் மனைவியராகச் சொல்லப்படடிருககின்றனர்.

இநநூல்களுககுப் பிறபட்ட காலத்தில் இலக்குமி அல்லது ஸ்ரீ திருமாலுக்கு மனைவியாகவும், காமனுக்குத் தாயாகவும், செல்வத்திற்கு தெய்வமாகவும ஆகினருள்.

இவள் கடல் நுரையிலிருநது எழுந்தவள என்றும், தன் கையில் தாமரைபபூவை ஏநதிககொண்டு நிரம்பிய அழகுடன் பிறந்தவள் என்றும இராமாயண காலத்தில் இவள் தோற்றம் சொல்லப்படுகிறது.

புராணங்களில இவள் பிருகு, கியாதி என்போரது புதல்வி எனப்படுகிருள்.

விஷ்ணு புராணத்தில் முதலில் இவர்களுக்கு மகளாக வந்தவள். பின்னொரு காலத்தில் திருப்பாற்கடலைக் கடைந்தபோது அதனின்றும் எழுந்தவள் என்று சொல்லப்படுகிருள்.

இலக்குமி திருமாலின் சக்தி. அவரது மார்பில் உறைபவள்.




# திருமகள்

"மாருதி"

திருமாலின் அவதாரந்தோறும் இவளும் துணைவியாகத் தோன்றுவாள். அவர் மாணியாக வந்து போது இவள் கமலையாகத் தாமரையினின்றும் வந்தாள். பரசுராமனாகிய போது இவள் தரணியாக வந்தாள்.

இராகவனான போது சீதையாக வந்தாள். கிருஷ்ணனான போது உருக்குமிணியாக வந்தாள்.

இவள் பேரழுகுக்கு எல்லையே இல்லை. பொன்னிறமான இவளுக்குப் பல பெயர்களுண்டு.

ஸ்ரீ என்னும் பதத்திற்கு மக்களால் சேவிக்கப்படுகின்றவள் (ச்ரயதே) என்றும், மக்களுக்காகச் சேவிப்பவள் (சர்யதே) என்றும் பொருள் கூறப்படும்.

இதனின்றும் இவள் ஆனமாக்களை திருமாலிடத்து ஆறறுப்படுத்தி ஆன்மாக்களின் பொருட்டு அருளுடன் திருமாலிடத்து மன்ருடுந்தாய் என்றும் அழகிய கருத்து விளங்குகிறது. இந்தத் தன்மையைப் புருஷகாரத்துவம் என்பர்.

சேதனனாகிய ஆன்மாவை அருளாலும் திருமால் அழகாலும் திருத்தும் சக்தி 'திரு' வாகும்.

ஸம்ஸ்கிருத மகாகவி பவபூதி என்பவர் திருமகளைப் பற்றிக் கூறுவதாவது:-

"இதோ என் வீட்டில் லக்ஷ்மி குடிவந்திருககிருள். இவளே கிருஹலட்சுமி. மனைமங்கலம் சிறக்க இல்லறத் திருமதியாக வந்து சேர்ந்திருக்கிருள். தன கண்களில் அமுதமே மையாகத் தீற்றியிருககிருள். இவளது மேனியோ அங்கமோ என்மீது பட்டால், என் உடம்பில் சநதனம் பூசிக்கொண்டது மாதிரி, ஒரு சுகம் பரவுகிறது.

இவளுடைய மென்மையான கைகள் என் கழுத்தை அணையும் போது குளிர்ந்த முத்தாரம் புரள்வது போல் என் உளளத்தில் ஒரு புல்லரிப்பு எழுகிறது.

இவளுடைய எல்லா அம்சங் களுமே எனககு மிகமிக விருபபமானவைதான். ஆனால ஒன்றைத் தவிர, அதுதான இவளைப் பிரிந்திருக்கும் போது ஏற்படும் விரக வேதனை" எனகிருர பவபூதி.

பிரம்ம வைவர்த்த புராணம் கீழ்வருமாறு சொல்கிறது.

"முனிவர்களும் மகரிஷிகளும் திருமகளைத் துதி செய்து, இந்த பூவுலகில் வந்து உறையுமாறு வேண்டிக்கொண்டார்கள். அப்போது லக்ஷ்மிதேவி அவர்களிடம் தெரிவித்தாள்.

'நற்குணங்கள், நன்னடத்தை உள்ளவர்களிடம் நான் வசித்து வருவேன்.

குரு, பிதுருக்கள், தேவதைகள், தாய் தந்தையர், விருந்தினர், உறவினர் ஆகியவர்களை யார் வெறுக்கிறார்களோ அவர்களிடம் நான் தங்கமாட்டேன்.

எப்போதும் கவலைப்பட்டுக் கொண்டிருப்பவன், கோழை, சோகம் கொண்டவன் தீய நடத்தை உள்ளவன், கஞ்சன், கடனாளி ஆகியவர்களிடமிருந்து நான் ஒதுங்கி விடுவேன்.

மேலும் அஞ்ஞானி, மந்தமதி, சிடுசிடுப்பானவன், கோள் - கலகங்களில் முனைந்திருப்பவன், காமுகன், இவர்கள் வீட்டுப்படி ஏறமாட்டேன்.

மனச்சாட்சிக்குத் துரோகம் செய்பவன்,சொந்தப்பெண்ணை விலைக்கு விற்பவன், பிறர்க்குத் தீங்கு செய்து பிழைக்கும் சுயநலக்காரன், தெய்வ நிந்தனை புரிபவன், அண்டியிருப்பவர்களுக்குத் துரோகம் செய்து பணம் சேர்ந்து வைப்பவன், எப்போதும் அழுக்கு ஆடை உடுப்பவன், பிறர் பொருளைக் கவர்பவன், நேர்மையில்லாதவன், ஒழுங்கு முறையற்றவன், இழிசெயல்களில் ஈடுபடுபவன் இத்தகையவர்களையும் வெறுத்து ஒதுக்கி விடுவேன்.

அறமும், நெறியும் நிலவும் ராஜ்யத்தில் ராஜலட்சுமியாகவும், அத்தகைய வீட்டில் கிருஹலட்சுமியாகவும் நான் பேனை விளக்க நிலை பெற்றிருப்பேன்'

நான் (திருமகள்) நிலவும் இடத்தில் தரமும் புகழும் பரவும். அடக்கமும், அழகும், பெருந்தன்மையும் உள்ள சுமங்கலிகளின் இல்லங்களில் வசிக்க நான் விரும்புகிறேன். பொன் போன்ற தானியங்களும், வெள்ளி போன்ற அரிசியும், வெண்பனி போன்ற அன்னமும் தூய்மை கெடாமல் எங்கே நிறைந்துள்ளனவோ, அங்கே நான் இருப்பதை உணரலாம்."

"இனிமையாகப் பேசுபவர், பிரியமான தோற்றம் கொண்டவர், மிதமாகப் பேசுபவர், அடக்கமுள்ளவர், அறநெறியுடன் உள்ளவர், செருக்கு அற்றவர், பரோபகாரி, தியாக புத்தி உள்ளவர், சத்தியம் பேசுபவர் ஆகிய நன் மக்களிடம் நான் நிலைத்து வாழ்வேன்! என்று கூறுவதாக ஸ்காந்த புராணம் கூறுகிறது.

"எந்தப் பருவத்திலும், எத்தகைய சோதனையிலும் கடமையை விடாது செய்து வருபவர், சினத்தை வென்றவர், எல்லாரிடமும் தோழமை கொண்டவர், சீலம் மிக்கவர், பிறர் நம்பிக்கைக்கு உரியவர், சுய உழைப்பு, சுயபுத்தி, சுய புண்ணியம் ஆகியவைகளாலேயே தம் நல்வாழ்வை உருவாக்கிக் கொள்ளும், உழைப்பாளிகள், திறமை, புகழ் செல்வம் எல்லாம் பெற்றிருந்தும் செருக்கு இல்லாமல் இருப்பவர், சொத்துச் சேர்ப்பதிலேயே முனைந்திருக்கும் பேராசையைத் துறந்தவர், சம்பாதித்த செல்வத்தை சூரியனைப் போல் பிறர்க்கும் பயன்படுத்துபவர் ஆகியவர்களை அடைந்து நான் (திருமகள்) பெருமிதம் கொள்ளுகிறேன். மங்கலப் பெருமையும் அவர்களால்தான்!" என்று ஸ்ரீகால கண்ணி ஜாதகம் கூறுகிறது.

## திரு அருளும் தேவி :

சகல பாக்கியங்களையும் அருளபவள் திருமகள். வேதங்களிலே பழமையான ரிக் வேத மந்திரம் திருமகளைப் போற்றுகிறது. அதில் 16 ஸ்லோகங்கள். அவற்றுள் முதல் ஐந்தும், எட்டாவதும் திருமகளைப் போற்றுவதாகும்.

'திருமகள், சொர்ண வண்ணம் படைத்தவள். மஞ்சள் நிறத்தவள். சொர்ண, வெள்ளி மாலைகள் அணிந்தவள். சந்திரனுக்கு முன் பிறந்தாள். சொர்ணமயமானவள். அக்னிலே என்பொருட்டு அந்தத் தேவியை வரச் சொல்".

'அக்னியே, அவள் எங்களைக் கெட்ட வழியில் போக விடாதவள், அவளாலே சொர்ணம், குதிரை, பணம், புருஷன் ஆகிய பாக்கியங்களை அடைவோம்!'

'குதிரைகளைக் கட்டிய ரதத்தில் வீற்றிருப்பாள். யானையின் குரல் கேட்டு விழித்தெழுபவள். இத்தகைய லக்ஷ்மியை உபாசிக்கிறேன். அவள் எனக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்.'

'சொர்ணப் பிரகாசம் உள்ளவள். மந்தஹாஸம் செய்பவள். குளிர்ச்சியுள்ளவள். ஜ்வலிக்கிறவள். திருப்தி அடைந்தவள். பிறரைத் திருப்தியுறுவிப்பவள். தாமரையில் இருப்பவள். தாமரைப்பூ நிறத்தினள். இத்தகைய லக்ஷ்மியை உபாசிக்கிறேன்.

'சந்திரனின் சகோதரி, கீர்த்தியால் விசேஷமாய் ஜ்வலிப்பவள். தேவதைகளினால் அடையப்பெறுபவள். உதார குணத்தினள். தாமரையில் உண்டான

வள். அவளைச சரண் அடை கிறேன்.'

'தாகம், சோம்பல் இரண்டை யும் தீர்ப்பவள். தரித்திரத்தைப் போக்குகிறவள். பசு, குழந் தைகளால் வீடு நிறைந்திருக்கச் செய்பவள். அவளைத் தியா னிப்பதால் பசு, குதிரை, ஏவ லாள் புருஷன் ஆகிய பாக்கி யங்களை அடைவோம்.'

வைணவர்களுக்கு லக்ஷ்மி ஒரே தேவி தான். ஆயி னும் அவளை ஆகம முறைப்படி அமைந்த எட்டு உருவங்களில் வணங்குவோர் உண்டு. அவர் களே அஷ்டலட்சுமிகள்.

அறம், பொருள், இன்பம, வீடென்னும் நால் வகையான பேறுகளைக் கொடுக்கக் கூடி யவர்கள் மகாவிஷ்ணுவும் மகா லட்சுமியும்.

ஒவ்வொரு இந்துவும் ஒவ் வொரு தெய்வத்தை குலதெய் வமாக வழிபட்டாலும் மகா லட்சுமியை அனைவரும் வழி படுகிறுர்கள். சைவ வைணவ வேறுபாடு கிடையாது.

கதிரவனுக்கு அவன் கதிர் கள் அவனை விட்டுப் பிரி யாமல் அவனுக்குப் பெருமை யைத் தருவது போலவும், கடலுக்கு அதன் அலைகளைப் போலவும், இறைவருள் நாரா யணனை விட்டுப் பிரியாமல் உடன் இருந்து சகல செல்வஙக ளையும் கொடுப்பவள் மகாலட் சுமி என்று கூறப்படுகின்றது.

மனித உடம்பில் எட்டுத் தரித் திரங்கள் இருப்பதாகக் கூறுகி ருர்கள். இறைவனை வணங் கும் பொழுது கீழே விழுந்து வணங்கினால் தரித்திரங்கள் போகும் என்றும் அவ்வாறு எட்டு லட்சுமிகளையும் வணங் குபவர்களும் பயன் அடைவார் கள்.

எநத இடததில் லட்சுமி பூஜை குறைவினறி நடைபெறு கின்றதோ அவ்விடத்திலிருந்து மகா லட்சுமி நீங்குவதில்லை.

தன்னை வழிபாடு செய் பவர்களுக்கும், வணங்குபவர் களுககும் நினைபபவர்களுக் கும் எல்லாத் துன்பங்களையும் நீக்கி எல்லாவித நன்மைகளை யும் அளிக்கிருள்.

ஆக்கல், அழித்தல், காத்தல் ஆகிய முத்தொழில்களும் இறை வனின் அருள் விளையாட் டாகும். படைப்புத் தொழி லில் கலைமகளாகவும், காத்தல் தொழில் புரியும் போது திரு மகளாகவும், அழிக்கும் போது துர்க்கையாகவும், பிறைசூடிய பெருமானின் துணையான மலை மகளாகவும் உருக்காட்டி அருள் கூட்டுகின்ருர்.

இத்தகைய முத்தொழில்களை யும் புரிகின்ற சக்திக்கு அதிதே வதை மகாலட்சுமி.

திருமகளின் அருள் அரசு, மக் கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், வேலையாட் கள் ஆகிய எட்டு வகைச் செல் வங்களையும் பெண், ஆடை, அணிகலன், உணவு, தாம்பூலம், பரிமளம், இசை, மலர்மஞ்சம் ஆகிய எட்டு வகைச் சுகங்க ளையும் அளிக்கக்கூடியது.

அழகானதும் மங்களம் தருவ தும் லக்ஷ்மிதான்!

## பிரணவமும் பிள்ளையார் சுழியும்

ஓங்காரம் பரம் பொருளை உணர்த்தும் சொல். இதன் வடிவம் அகரம், உகரம், மகரம். இவை ஒவ்வொன்றின் பின்னரும் மனனுணர்ச்சியாலே (பைசந்தி வாக்காக) தியா னிக்கப்பெறும் அரை மாத்திரையொலி இவை நான்கும் கூடியுள்ளன. இங்ஙனம் கூடியுள்ள நிலை சமட்டிப் பிரணவம். இதன் வரிவடிவத்தை விளக்க உபநிடதங்களும் ஆகமங்களும் பல உவமைகளை எடுத்துக் காட்டின. அவற்றுள் முண் டோப நிஷத் பிரணவம் வில்வடிவுள்ளது என்றது. 'சர்ப்ப வடிவான குண்டலினி' 'இது மூலநாடி அன்னத்தின் குரல் போன்ற ஒலியுடையது' என்கிறது ஞானசித்தியாகமம்.

பிரணவம் ஐந்து எழுத்துக்களுடைய கூட்டம். முதல் உருநட்சத்திர வடிவு. அதாவது வட்டப்புள்ளி •. இரண் டாம் வடிவு தண்டம்போல் படுக்கையில்கிடக்கும் நேர்கோடு. மூன்றும் உரு ೦. நான்காம் உரு பிறைமதி. ஐந்தாம் உருவாகிய பிந்து புள்ளிவடிவு. இவற்றுள் வட்டப்புள்ளியும் நேர்கோடும் சேர்ந்து 'உ' பிள்ளையார்சுழி ஆகிறது. இந் தச் சுழியை இட்டாலே போதும், பிள்ளையார் வணக்கம் ஆகிவிடுகிறது.

ஒலி வடிவிலும் வரி வடிவிலும் ஐந்தன் கூட்டாகிய பிரணவத்தில் அகரம் சிவன். உகரம் சக்தி, மகரம் மலம். நாதம் மாயை. பிந்து உயிர். இவற்றுள் அகர உகர வடிவாக உள்ள (உ) பிள்ளையார் சுழி சிவ சக்திகளின் சேர்க்கையாகும்.

'கணபதி' என்ற நூலிலிருந்து
தொகுத்து அனுப்பியவர் :
**கமலா மாரியப்பன் - கோவை.**

தொடர் கட்டுரை

# முமுட்சுப்படி

திரு. மாருதிதாஸன் - காஞ்சிபுரம்.

**24) மணம் - விளக்குக.**

மலர்கள் பல்வேறு வகையாக மலர்ந்து பல்வேறு மணத்தைப் பரப்பி நிற்பதைப் போலவே, பகவானிருக்குமிடத்திலும் பல வகையான மணங்கள் வீசி நிற்கும். நறுமணம் வீசும் இவ்வியல்பு இறைவன் திருமேனியின் குணமாகும்.

**25) பருவம் - விளக்குக.**

இறைவன் எப்போதும் இளமைப் பருவமுடையவனாகவே இருப்பான். அவனுக்கு நரை, திரை, மூப்பு முதலியன இல்லை. இறைவனுக்குள்ள பருவம் என்றும் இளமையழகு நிறைந்த பருவமேயாகும்.

**26) திவ்ய பூஷணங்கள் யாவை?**

இறைவன் திருவடிகளில் விளங்கும் நூபுரம் முதல் திருமுடியில் அணியும் திருவபிஷேகம் (மகுடம்) வரையும் உள்ள ஆபரணங்கள் திவ்ய பூஷணங்கள் எனப்படும். மென்மை, அழகு, மணம், ஒளி முதலியன இவைகட்கு உண்டு.

பகவானின் திருவாபரணங்கள் குற்றமற்றவை. அவனுடைய அங்கங்களுக்கு மலர் பூத்தது போன்று பொருத்தமுடைவை.

பகவானுடைய ஆபரணங்களுக்குத் "திவ்யாபரண ஆழ்வார்கள்" என்னும் திருநாமமும் உண்டு.

பகவானுடைய ஆபரணங்களாவன:

திருவபிஷேகத்தின் கீழ்ச் சுற்று, மேல் கவிப்பு, திருச்செவி மலர், மகரகாரமான தோடு, திருவட்ட மணி, திருவாரம், திருத்தோள் வளை, திருவணை, திருமறு, ஸ்ரீகௌஸ்துபம், முத்தாரம், திருவுதரபந்தனம், திருப்பீதாம்பரம், அரைநூல்பட்டிகை, நூபுரம் முதலியனவாம்.

இவையேயன்றி, பகவானின் ஆபரணங்கள் எண்ணிறந்தனவாம். இவை எம்பெருமானார் கத்தியத்தில் காணப்படும் ஆபரணங்களைப் பற்றிய செய்திகளாம்.

**27) திவ்யாயுதங்கள் யாவை?**

சங்கு, சக்கரம், கதை, சார்ங்கம், கட்கம் (வாள்) முதலியன பகவானின் எண்ணிறந்த ஆயுதங்களாம்.

இவ்வாயுதங்கள் பகவானை வெறுப்போர்க்கு ஆயுதங்களாகவும், பக்தர்களுக்கு அணிகலன்களாகவும் தோன்றும்.



28) பெரிய பிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்கள் யாவர்?

பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டியார், நப்பின்னைப் பிராட்டியார் முதலான தேவி மார்களும் மற்றும் ஆயிரம் தேவிமார்களும் பகவானுக்குரிய தேவிமார்களாக அலங்கரிக்கின் றனர்.

29) நித்ய ஸுரிகள் யாவர்?

அனந்தன் (ஆதிசேஷன்), கரு டன், விஷ்வக்சேனர் முதலா னோர் நித்ய சூரிகளாவர்.

பரமபதத்தில் காலதத்துவம் உள்ளனவும் பகவானை அனு பவித்துக்கொண்டு கைங்கர்யம் செய்பவர்களுக்கு நித்ய சூரிக என்பது பெயர்.

30) சத்ர சாமராதிகள் யாவை?

குடை, சாமரம், திருவாலவட் டம், வட்டில், படிக்கம் முதலி யன சத்ர சாமராதிகள் எனப்ப டும். பகவானுக்குக் கைங்கர்யம் செய்யும் போது இவை இன்றி யமையாது தேவைப்படும்.

31) திருவாசற்காக்கும் முதலிகள் யாவர்?

எம்பெருமைனுக்கு ஏதும் நிக ழாதிருக்க வேண்டுமே என் னும் ஏக்கத்துடன் வாயிலைக் காத்து நிற்போர் திருவாசல் காக்கும் முதலிகள் எனப்படுவர்.

சண்டன் பிரசண்டன், பத்ரன் சுபத்ரன், ஜயன், விஜயன் முத லானோர் திருவாசல் காக்கும் முதலிகளாவர்.

இவர்கள் பகவான் கோவில் கொண்டிருக்கும் திருவாசலி லேயே நின்று கொண்டு அவ னுக்கு மங்களாசாசனம் செய் வர்.

32) கணதிபர் யாவர்?

குமுதன், குமுதாட்சன் எனப் படுவோர் கணதிபர் எனப்படு வர். இவர்கள் எம்பெருமா னுக்குப் பல்லாண்டு பாடுப வராய், பரமபதத்துக்குக் காவ லாய் இருப்பார்கள்.

அதாவது, எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருத்தலத் துக்கே காவலராய் இருப்பவர் கள் இவர்கள்.

33) முக்தர் எனப்படுவோர் யாவர்?

நம்மைப்போன்று சம்சாரிக ளாக இருந்து முத்தி பெற்ற வர்கள் முத்தர் எனப்படுவர்.

சுகர், வாமதேவர் முதலா னோர் முக்தராவார். நித்திய சூரிகளோடு இவர்களும் கலந்து கொண்டு பகவானைப் பரம பதத்தில் அனுபவித்துக் கைங் கர்யம் செய்து வாழ்வார்கள்.

34) பரமாகாசமாவது யாது?

பரம பதமே பரமாகாசம் எனப்படும்.

பஞ்ச உபநிஷத்துக்கள் என் னும் ஐந்து பொருள்களால் ஆக் கப்பட்ட கூட்டுப்பொருள்களா கவே பரமாகாசம் உள்ளது.

(இதுகாறும் கூறப்பட்டவை நித்திய விபூதியிலுள்ள நாரங் களாம். இனி வருவன இவ்வு லகிலுள்ள நாரங்களாம்.)

35) ப்ரக்ருதி என்பது யாது?

சத்துவம், ரஜஸ், தமஸ் எனப்படும் முக்குணங்களோடும் கூடிய அசித்துத் தத்துவம் பிர கிருதி எனப்படும்.

36) பத்தாத்மாக்கள் யாவை?

இவ்வுலகுக்குள் உருமாய்ந்து கிடக்கும் ஆன்மாக்கள் பத்தாத் மாக்கள் எனப்படும். பந்தத்துள் அழுந்திக்கிடக்கும் ஆன்மாக்கள் இவை.

37) காலம் எனப்படுவது யாது?

சத்துவம், ரஜஸ், தமஸ ஆகிய இம்முக்குணங்களும் இல் லாத அசித்து காலம் எனப்ப டும்.

இமை கொட்டுதல் (நொடி) முதலாக ஆண்டு வரையுள்ள மாறுதலடையக்கூடிய காலதத் துவமே காலம் எனப்படும்.

38) மஹதாதி விகாரங்கள் யாவை?

மகான், அகங்காரம், பஞ்ச பூதங்கள், ஞானேந்திரியங்கள் முதலியன மஹதாதி விகாரங் கள் எனப்படும்.

39) அண்டங்கள் யாவை?

கீழ் ஏழு உலகங்கள், மேல் ஏழு உலகங்கள் ஆகிய பதினான்கு உலகங்களைக் கொண்டது ஓர் அண்டம் எனப்படும். இது போன்று எண்ணற்ற அண்டங் கள் உள்ளன.

40) அண்டத்துக்குட்பட்ட தேவாதி பதார்த்தங்கள் யாவை?

அண்டத்தில் உள்ள தேவர், மனிதர், பறவைகள் முதலியன அண்டத்துக்குட்பட்டவையாம்.

41) சொரூபதோ நித்தியங்கள் என்றால் என்ன?

உற்பத்தியும் அழிவுமில்லா மல் எப்பொழுதும் உள்ளவை சொரூப நித்தியங்கள் எனப்ப டும்.

"ஜ்ஞாநந்தா மலத்வாதிகளும்" என்று தொடங்கி, "காலமும்'

என்பது வரை கூறப்பட்டவை இவை.

42) பிரவாஹதோ நித்தியங்கள் என-ருல் என்ன?

உற்பத்தியும் அழிவுமிருந்தாலும் முன்பிருந்த நாமம், ரூபம், முதலியன மாருமல் இருக்கும் பொருள்கள் பிரவாஹ நித்தியங்கள் எனப்படும். இவை ஆற்றொழுக்கு போல் நிலைத்து நில்லாமல் ஓடிக்கொண்டேயிருப்பனவாம்.

மூலம் : 98

"அயநம் என்றது - இவற்றுக் காச்ரயமென்றபடி" (இதுவரை நாரபதத்தின் பொருளைக் கூறியவர், இனி அயநபதத்தின் பொருளைக் கூறத்தொடங்குகிருர்.)

1) அயநம் என்பதன் பொருள் யாது?

நித்திய வஸ்த்துக்களின் திரள்கள் என்று முன்பு கூறிய எல்லாப் பொருள்களுக்கும் பெருமான் ஆதாரமாய் இருக்கிருன் என்பதே அயநம் என்பதன் பொருளாகும்.

மூலம் : 99

"அங்ஙனன்றிக்கே, இவை தன்னை ஆச்ரயமாக வுடையனென்னவுமாம்."

1) அயநம் என்பதற்குக் கூறும் வேறு பொருள் யாது?

பெருமான் அப்பொருள்களைத் தனக்கு ஆதாரமாக உடையவன் (எல்லாப் பொருள்களிலும் வியாபித்திருப்பவன் என்பதும் ஒரு பொருளாம்.) என்பதும் வேறு ஒரு பொருளாம்.

மூலம் : 100

"இவையிரண்டாலும் பலித்தது பரத்வ ஸௌலப்யங்கள்."

1) மேற்கூறிய இரண்டு வகைப் பொரு-ளால் தெளிவாகும் கருத்து யாது?

தன்னைத் தவிர மற்றெல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாக இருப்பவன் பெருமான். இவ்வாறு இருப்பதனைப் பரத்துவம் என்பர். இது தத்புருஷ ஸமாஸத்தில் தேறிய பொருள்.

இங்ஙனம் உயர்ந்த தன்மை வாய்ந்த பெருமான் சேதனா சேதனங்களில் தன்னை அமைத்துக்கொண்டு இருத்தலே சௌலப்பியம் எனப்படும். இது பகுவிரீஹி ஸமாஸத்தில் தேறிய பொருளாம்.

இவை தவிர ஒவ்வொரு ஸமாஸத்திலும் (வேற்றுமையிலும்) பரத்துவ சௌலப்பியங்கள் ஆகிய இரண்டையும் தேறிய பொருளாகக் கொள்ளலாம்.

மூலம் : 101

"அந்தர்யாமித்வமும், உபாயத்வமும், உபேயத்வமுமாகவுமாம்"

1) அந்தர்யாமித்வம் - விளக்குக.

(பகுவிரீஹி ஸமாஸத்தில், முற்கூறியபடி) ஒவ்வொன்றிலும் உட்புக்கிருந்து நியமித்துக் கொண்டு போகின்றவன் பகவான் என்பதை அறிந்தோம். அங்ஙனம் இருத்தலே அந்தர்யாமித்வம் எனப்படும்.

நாராயணபதத்தில் உள்ள அயந பதத்திற்கு உபாயம், உபேயம் என்னும் இரண்டு பொருள் கிடைக்கிறது.

தத்புருஷ ஸாமாஸத்தில் பகவான் உபாய உபேயமாயிருக்கிருன் என்னும் பொருள் கிடைக்கிறது. அறிவற்ற அசேதனங்கள் தவிர, ஞானம் உள்ள சீவான்களுக்கும் பகவான் உபாயமாகவும், உபேயமாகவும் இருப்பவன் என்பது தெளிவாகப் புலனாகும்.

மூலம் : 102

" 'எம்பிரான் எந்தை' என்கையாலே ஈச்வரனே எல்லாவுறவு முறையுமென்று சொல்லும்."

1) எல்லா உறவுமுறையுமாகப் பக-வான் இருக்கிருர் என்பது எங்-ஙனம்?

நாராயணன் என்னும் திருநாமத்தை நாவார ஓதும் (அநுஸந்தானம்) திருமங்கையாழ்வார் பகவான் எல்லாவித உறவுமுறையுமாக இருக்கிருன் என்பதனைத் தம் பாசுரத்தில் அருளிச் செய்கிருர்.

"எனக்கு உதவி செய்பவனாகவும், தந்தை முதலிய எல்லா உறவு முறையாகவும், என்னை ஆள்பவனாகவும், என்னுடைய வாழ்நாளாகவும் நாராயணன் இருக்கிருன்" என்று திருமங்கை யாழ்வார் திருவாய் மலர்ந்தருளுகிருர்.

மூலம் : 103

"நாம் பிறர்க்கான வன்றும், அவன் நமக்காயிருக்கும்."

1) பகவான் நமக்கு உறவாக இருந்து நமக்குச் செய்வது யாது?

நாம் பிறரோடு சேர்ந்து கொண்டு, எம்பெருமானை மறந்து அவர்களுடன் கலந்து உறவாடியிருக்கும் போதும் பகவான் நம்மை விடாது பற்றி நமக்கு நல்லவனாகவே இருந்து வேண்டிய அனைத்து உதவிகளும் செய்து காப்பாற்றி வருவான்.

மூலம் : 104

"இரா மட மூட்டுவாரைப் போலே, உள்ளே பதிகிடந்து

ஸத்தையே படித்து நோக்கிக் கொண்டு போரும்."

1) நாம் பிறரைச் சார்ந்து இருந்தாலும் பகவான் நம்மருகிலே இருந்து கொண்டு உதவுவான் என்பதனை விளக்குக.

ஆணவம் மிருந்த பிள்ளையொருவன் தன் தாயைப் பிரிந்து சென்ருன். அங்கும் இங்கும் அலைந்தான். முடிவில் சத்திரம் ஒன்றைக் கண்டான். அங்கே மூன்றுநாள் அவனுக்கு உணவும் உறைவிடமும் இலவசமாகக் கிடைத்தது.

ஒருவர் அந்தச் சத்திரத்தில் தங்குவதானால் மூன்று நாளகள் மட்டுமே தொடர்ச்சியாகத் தங்கலாம். நான்காம் நாள் வேறு எங்காவது இருந்துவிட்டு மீண்டும் தான் அந்தச் சத்திரத்துக்கு வரமுடியும்.

இவ்வாறு ஒருவர் தொடர்ச்சியாக மூன்று நாள்கள மட்டுமே தங்கி உணவருந்தலாம் என்பது அந்த மடத்தின் விதி.

அதன்படி அந்தப் பிள்ளை நான்காம் நாள் அந்தச் சத்திரத்தை விட்டு நீங்கி வேறொரு இடத்தில் அநாதையாகத் தங்கியிருந்தான். உணவின்றிப் பசியோடு களைத்திருந்தான்.

அப்போது அவன் தாய் தன் மகன் தங்கியிருக்கும் இடத்தை அறிந்து, தன்னை வெளிக் காட்டிக்கொள்ளாமல், தான் கொண்டு சென்ற உணவைத் தன் மகன் அருந்துமாறு செய்து ஆதரிப்பாள்.

அதுபோலவே, எல்லா உறவின் முறையாகவும் இருந்து இறைவனும் உயிர்களைக் காப்பாற்றுகிருன்.

ஆணவத்தால் நாம் அவனை வணங்காமலும், அவனைச் சார்ந்து தொண்டு புரியாமலும் இருக்கும் காலததும்

அவன் நமக்கு உதவி புரிகிருன். நம் கண் எதிரே தோன்ருல் இருந்தாலும், அந்தர்யாமியாக இருந்து கொண்டு நம் ஆக்கம் கருதி, நமக்கு வேண்டும் நலன்கள் யாவும் புரிந்து பகவான் நம்மை வாழ்விக்கிருன்.

(தொடரும்)



ஸ்ரீமங்கேஷி கோயில் - கோவா.

# ஆன்மீக விநாடி வினா

'வில்வதாசன்'

**1. பஞ்சாங்க விஷயங்கள் :**

க-நவராத்திரி 9 நாளும் எந்தப் பட்சம்? கிருஷ்ண அல்லது சுக்ல பட்சம்?

ங-எங்கேனும் அண்ணனுக்கு உரிய சதுர்த்தியும், இளவல் முருகனுக்கு உரிய கிருத்திகையும் ஒரே நாளில் வரமுடியுமா?

ச-ஐப்பசி மாதத்து சிவராத்திரிக்கு ஒரு விசேஷம் உண்டு. அது என்ன?

ஞ-லக்ஷ்மீ விரதம், கேதார கௌரி விரதம், பலிபூஜை, யம தர்ப்பணம் - இப்படிப் பலவாறும் குறிப்பிடப்பட்டிருக்கும் ஒரு பண்டிகை அது எது?

**2. பல்வேறுவகைக் கேள்விகள் :**

க-தமிழில் நாலடியார் என்ற பழநூல் உண்டு. சம்ஸ்கிருதத்தில் 'எட்டடியார்' என்ற பெயர் கொண்ட நூல் தெரியுமா? அதை இசையரங்கில் பாடுவார்கள். பஜனைமடத்தில் அதற்கு இடம் உண்டு. திவ்விய நாம நிகழ்ச்சியில் நாட்டிய மேடையில் அபிநயம் செய்வர் அப்பாடல்களுக்கு!

ங-அனு என்று சுருக்கமாக அழைக்கப்பெறும் நம் சகோதரிகளின் முழுப்பெயர் என்னவாகவெல்லாம் இருக்கலாம்?

ச-பரம சிவேந்திர சரஸ்வதி என்ற காஞ்சி காமகோடி பீடத்து ஆசார்யரின் சிஷ்யர் என்பர் இவரை. பரமஹம்ஸராக விளங்கிய சீடர் வேதாந்த பரமான சம்ஸ்கிருத பாடல்கள் இயற்றி நெரூரில் சமாதி கொண்டுள்ளார். இச்சீடர் யார்?

ஞ-அஷ்டாக்ஷர மந்திரம் நாராயணனையும், துவாதச அக்ஷர மந்திரம் வாசுதேவனையும் கொண்டாடுகிறுப் போல, இராமபிரானுக்கு 13 எழுத்து மந்திரம் உண்டு. அதை ஒரு மந்திரம் என்று உணராமலேயே நாம் அதை கூறி வணங்குவது உண்டு எனலாம். மந்திரத்தைச் சொல்லுங்கள்.

**3. யார் இவர்? :**

க-பெரும்பாலான இடங்களில் இந்தத் தெய்வம் பக்கவாட்டில் பார்த்திருக்கும் திருத்தோற்றமாக விளங்குவது உண்டு.

ங-தம் ஆன்மிக இசை விரிவுரைகளை வயலூரர் வள்ளலின் திருவருளாலே என்று பெரும்பாலும் தொடங்கி, உருவாய் அருவாய் எனும் கடைசி அனுபூதிப் பாடலோடு நிறைவு செய்து வந்தவர்.

ச-தாழ்த்தப்பட்டோராக இருந்த 'தீண்டாதார்' என்போரைக் கடவுளின் குழந்தைகள் எனும் அரிய பொருள் கொண்ட 'ஹரிஜனங்கள்' என்று அழைத்தவர்.

ஞ-குருந்த மரத்தடியில் குரு தரிசனம் செய்த துறவர்.

**4. இவர்களுக்கு வழக்கில், பிரபலமான வேறொரு பெயர் உண்டு. அதைக்கூற வேண்டும். :**

க-திருச்சிற்றம்பல முடையார் - தெய்வம்.

ங-வர வரமுனி-வைணவ ஆசார்யர்

ச-திருவெண்காடர்-சிவஞானி, சித்தருள் ஒருவர்.

ஞ-அங்காரகன்-நவக்கிரகங்களுள் ஒருவர்.

ட-குடமுனி - முனிவர்.

ண-அளகேசன் - ஓர் அதிகாரி எனலாம்!

**5. சரியா, தவறா?**

க-வைணவத்தின் தலைமைப் பீடமாம், பூலோக வைகுண்டம் ஆகிய ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் ஆழ்வார் ஒருவரும் அவதரிக்கவில்லை.

ங-முருகனடியார் அருணகிரிநாதர் பாடிய அவ்வளவு பாடல்களும் 'திருப்புகழ்' என்று தொகுக்கப்பட்டுள்ளது.

ச-மார்கழி மாதம் மட்டும திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு விடியற்காலையில் வழக்கமான ஸ்ரீவேங்கடேச சுப்ரபாதம் பாடி எழுப்புதல் இல்லை.

ஞ-ரத சப்தமியன்று ஏழு எருக்கிலைகளைத் தலையில் வைத்து ஸ்நானம் செய்வது சூரிய வழிபாட்டில் சேர்ந்தது.

### 6. பொருத்துக மூன்று மாதவரையும் :

| | |
|---|---|
| க-அலகாபாத் | 1. சேதுமாதவர் |
| ங-இராமேசுவரம் | 2. பிந்துமாதவர் |
| ச-வாரணசி | 3. வேணீ மாதவர் |

### 7. எந்த அவதாரம் எது?

ஆழ்வார்கள் திருவேங்கடமலையை 'யாம் விரும்பும் வெற்பு' என்று அனுபவித்தவர்கள் அவர்கள் பாடும் இந்த அடி ஒவ்வொன்றும் கூறும் அவதாரம் எது?

க-மண் கோட்டுக்கொண்டான்மலை - (பேயார்)

ங-மான்மாய எய்தான் வரை (பொய்கையார்)

ச-குழக்கன்று கொண்டெறிந்தான் குன்று (பேயார்)

ஞ-விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு (பேயார்)

### 8. கோயில்களைப் பொருத்துக :

க-கடற்கரைக் கோயில்கள்

1. - ஆவுடையார் கோயில்

ங-சௌந்தர்ய நாயகி உடனுறை சிவலோகநாதசுவாமி

2.- திருவாரூர்த் தியாகேசர்.

ச-முகத்தைக் காட்டி, தேகம் முழுமையும் காட்டாத மாயம்

3. - மாமல்லபுரம்.

ஞ-கல்லில் சமைத்த அற்புதக் கொடுங்கை

4. - திருப்புன்கூர்.**(விடைகளுக்கு: தலைகீழ்)**

## விடைகள் :

1. க-மஹாளய அமாவாசைக்கு அடுத்த நாள் ஆயிற்றே நவராத்திரி. சுக்லபட்சம் தான்.

ங-வரலாமே. இது திதி அது நட்சத்திரம்.

ச-விடிந்தால் தீபாவளி அல்லவா?

ஞ-தீபாவளிப் பண்டிகையன்று இவ்வளவு விசேஷம் உண்டு.

2. க-அஷ்டபதீ (கீத கோவிந்தம்)

ங-அனுராதா (அனுஷா என்கிறார்கள்), அனுபமா, அனுசூயா, அனுத்தமா, இன்னும் லலிதா சஹஸ்ரநாமத்தில் அனுக்ரஹதா என்ற அழகிய பெயரும் அம்பிக்கைக்கு உள்ளது.

ச-சதாசிவ ப்ரம்மேந்த்ரர்

ஞ-ஸ்ரீராம் ஜய் ராம் ஜய் ஜய் ராம் - எண்ணினால் 13 எழுத்து வரும். இம்மந்திரத்தின் சுருக்கம்தான் நம் ஸ்ரீராமஜயம்.

3. க-ஆஞ்ஜநேய சுவாமி. அவரது மலையேந்திச் செல்லும் தோற்றம் அச்செயல் வீரரின் விழுமிய அவசரம் ஆகும். (அவசரம் என்றால் சந்தர்ப்பம், சமயம்)

ங-கிருபானந்தவாரி அவர்கள்.

ச-மகாத்மா காந்தி

ஞ-மாணிக்க வாசகர் (தலம் திருப்பெருந்துறை)

4. க-தில்லை நடராஜப் பெருமான்.

ங-மணவாள மாமுனிகள்.

ச-பட்டினத்தடிகள்.

ஞ-செவ்வாய்.

ட-அகஸ்திய மகரிஷி

ண-குபேரன் (என்றால் பலரும் வாயைத் திறப்பர்!)

5. க-உண்மை.

ங-தவறு. மற்றும் கந்தர் அனுபூதி, கந்தர் அலங்காரம், கந்தர் அந்நாதி, திருவகுப்பு, வேல் மாறல் எல்லாம் உள்ளனவே. இவை தனிநூல்கள் அன்றோ?

ச-ஆம், ஆண்டாளின் திருப்பாவை அப்போது ஒலிக்கும்.

ஞ-ஆம். சப்தமி தேவியன்று கூறி, சூரியனுக்கு அர்க்யம் செலுத்துகிறார்கள்.

6. க-பிரயாகை வேணி மாதவர் (த்ரிவேணி)

ங-சேது ச-பிந்து மாதவர் காசி.

7. க-ஆதிவராஹ சுவாமி (திருமலையில் இவரையே முதலில்தரிசிக்க வேண்டும்)

ங-இராமபிரான்.

ச; ஞ-விலங்கனிக்காகக் கன்றை எறிந்த கண்ணபிரான்

8. க-மகாபலிபுரம் என்கிறார்கள் சிலசமயம்

ங-திருப்புன்கூர்

ச-திருவாரூர்.

ஞ-சிற்ப அற்புதங்களுக்காகவே பார்க்கவேண்டிய திருப்பெருந்துறை.

# பாரத ஜோதிஷத்தின் வரலாறு

ஸ்ரீ என். சுந்தரராஜன் - சென்னை.

வேதத்தில் ஒரு அங்கமாக ஜோதிஷம் கூறப்பட்டிருககிறது. வேதாங்க ஜோதிஷம் என்று ஒரு பிரிவே வேதததில் இருக்கிறது. இதில் நக்ஷத்திரங்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. மேலும் புருஷ ஸூக்தத்தில் "சந்தர மா மனஸோ ஜாதசக்ஷு ஸூர்யோ அஜாயத" "பத்ப்யாம் பூமிர் திச: ச்ரோத்ராபத் ததா லோகாகும் அகல்பயன்" என்றதாலும், ஸ்ரீஸூக்ததத்தில் "சந்த்ராம் ஹிரண மயிம் லக்ஷ்மீம்" என்றதாலும், "சூர்யாம் ஹிரண மயிம் லக்ஷ்மீம்" என்றதாலும், கிரகங்களைப் பற்றி வேதத தில் கூறியிருப்பது நிதர்சனம்.

காலம் சென்ற பி.ஜி. திலகர் தாம் எழுதியுள்ள THE ORION என்ற புத்தகத்தில் 38-ம் பக்கத்தில் "வேதாங்க ஜோதிஷத்தில்" கூறியுள்ளதை எடுத்து மேற்கோள் காட்டியுள்ளார். அவர் கூறுவது "சூரியனும் சந்திரனும் சேர்ந்து ஸ்ரவிஷ்டா நக்ஷத்திரத்தின் அவிட்டம் ஆரம்பத்தில் ஸ்புட ரீதியாக இருந்தபோது காலக்கணக்கின் முதல் வருஷம் ஆரம்பமாயிற்று. உத்ராயணமும் அப்பொழுதுதான் தொடங்கியது" என்று கூறியுள்ளார். வேத காலத்தில் ஆரியர்கள் கற்ற கல்விகளைப் பற்றிக் கூறி ஒரு உபநிஷத் பட்டியலே கொடுத்துள்ளது. அந்தப் பட்டியலில் "வேத இதிகாச புராணம் முதலியவைகளுடன் நக்ஷத்ர வித்யா வான சாஸ்திரம்" இடம் பெறுகிறது. மற்றுமொரு உபநிஷத, "வேதம், சிக்ஷை, கலபம், வியாகரணம், நிருத்தம், சந்தம்" இவற்றுடன "ஜோதிஷம்" இருந்ததாகக் கூறுகிறது. இந்த ஆறுமே "வேதாங்கங்களாக" உபநிஷத்துக்களில் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீமான்கள் மஜூம்தார், ராய்சௌத்ரி முதலியவர்கள் எழுதியுள்ள இந்திய சரித்திரத்தில் ரிக்வேதம் கிறிஸ்து பிறப்பதற்கு சுமார் 2000 வருஷங்களுக்கு முன்பு ஏற்பட்டதாகக் கூறியுள்ளார்கள். (கி.மு. 2000) ஆனால் "பகவத் கீதை"யில் வேதங்களைப் பற்றி கூறப்பட்டிருப்பதாலும், பாரதப் போர் முடிந்ததும் ஸ்ரீகிருஷ்ண பகவான் தாம் வைகுண்டம் சென்றதும் கலி ஆரம்மபாகும் என்று மஹாபாரதத்தில் கூறியிருப்பதாலும், தற்கால வான சாஸ்திரத்தின்படி கலி, கிறிஸ்துவுக்கு சுமார் 3102 ஆண்டுகளுக்குமுன் என்று கூறியுள்ளதாலும், வேதங்கள் 3102 கி.மு. வுக்கு முன்பே ஏற்பட்டிருக்கவேண்டும் என்றும் தோன்றுகிறது. மேலும், மஹாபாரதத்திற்கு முன்பே ராமாயணம் ஏற்பட்டதால், இந்த இரு புராணங்களும் வியாஸரும், வால்மீகியும் கி.மு. 3102க்கு முற்பட்டவர்கள் என்பது விளங்கும். வால்மீகி ராமாயணத்தில் ஸ்ரீராமன் அவதரித்த காலத்தைக் கலி பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிருர்.

"ததஸ்ச துவாதஸே மாஸே
சைத்ரே நவமிகே திதௌ
நக்ஷத்ரே அதிதி தைவத்யே
ஸ்வோச்ச ஸம்ஸ்த்தேக்ஷு பஞ்சுக
க்ரஹேஷு கரககடேலக்னே வாகபதா
விநதுநா ஸஹ
ப்ரோதயமானே ஜகநநாதம
ஸரவலோக நமஸ்கருதம"

சைதரமாஸ நவமி, புதன கிழமை புனரவஸு நக்ஷததிரத தில ஐநது கிரகஙகள உசசத திலிருக்கும் போது கடக லக னததில் ஸ்ரீராமர அவதரிததார என்பது இதன் பொருள்.

ஸ்ரீமஹாபாரதத்திலும் பாரதப் போருககு அமாவாஸை அன்று நாள் பார்த்து ஸகாதேவர் கொடுத்ததும் ஸ்ரீகிருஷ்ணன் அமாவாஸையை முதல் நாளே சூரிய சந்திரர் சேர்க்கையால் ஏற்படுத்தியதையும் அறிவோம். மேலும் நக்ஷத்ர மண்டலம் கிருததிகை நக்ஷத்ரத்துடன் ஆரம்பமானது என்று "ஸதபதப்ராஹ்மணம்" கூறுகிறது. மேலும் "யாஜுஷ ஜோதிஷத்தின்" 5வது ஸ்லோகத்தை வியாக்கியானம் செய்த "ஸோமாகார சேஷநாகர்" கர்க ஸம்ஹிதையிலிருந்து மேற்கோள் காட்டி "தேஷாம்ச ஸ்ர்வேஷாம் நக்ஷத்ராணும் கர்மஸு கிருத்திகா பிரதமாம சக்ஷதே ஸ்ரவிஷ்டாது ஸம்க்யாயா: பூர்வ லக்னானாம்" என்று கூறியுள்ளார். அதாவது நக்ஷத்திரங்களுக்கெல்லாம் கிழக்கில் ஸ்ரவிஷ்டா நக்ஷத்திரம் இருந்தது என்று பொருள்.

பிரஹ்மாண்ட புராணம் (அத்-54) பின்வருமாறு கூறுகிறது.:-

"கிருத்திகானாம் யதா சூர்யா
பிரதமாம்சா கதோ பவேத்
விசாகானாம் யதா ஞ்நேயஸ்
சதுர்த்தாம்சே நிஷாகர:
விசாகானாம் யதா சூர்யாஸ் சரதே
அம்சம் த்ரிதியகம்
ததா சந்திரம் விஜாநீயாத்
கிருத்திகா சிராஷி ஸ்திதம்

*விஷுவந்தம் ததா வித்யாதேவா*
*மாஹூர் மஹர்ஷய:*
*ஸமராத்ரிரஹஸ்சைவ யதாத்தத்*
*விஷுவத் பவேத்"*

இதன் பொருள்: பௌர்ணமியன்று. சூரியன் கிருத்திகை நக்ஷத்திரத்தில் பிரவேசிக்கும் போது சந்திரன் விசாகம் 4 பாகையில் இருந்தது. சூரியன் விசாகம் 3 பாகையில் பிரவேசிக்கும் போது சந்திரன் கிருத்திகையின் ஆரம்பத்தில் இருந்தது. அந்த காலங்களில் பகற்பொழுதும் இரவுப்பொழுதும் சமமாக இருக்கும் என்று மகரிஷிகள் கூறியுள்ளனர்.

மேற்கூறியவற்றிலிருந்தெல்லாம், கிறிஸ்து பிறப்பதற்கு சுமார் 3000 ஆண்டுகளுக்கு முன்பே ஜோதிஷம், ரிக்வேதம், உபநிஷத்துக்கள், பிராம்மணங்கள், ராமாயணம், மஹாபாரதம், பிரஹ்மாண்ட புராணம் முதலிய நூல்களிலெல்லாம் கிரகங்களைப் பற்றியும், நக்ஷத்திரங்களைப் பற்றியும், வான சாஸ்திர விஷயங்களைப் பற்றியும் கூறியிருப்பது புலனாகும். இது இவ்வாறு இருக்கையில் கிரேக்கர்கள் நம் நாட்டில் முதல் முதலில் படையெடுத்து வந்தது சுமார் கி.மு. 327ல். அதாவது மேற்கூறிய நூல்களுக்கு சுமார் 2700 வருடங்களுக்குப் பிறகு. ஆகையால் நம்முடைய ஜோதிஷ சாஸ்திரம் கிரேக்கர்களிடமிருந்து கற்றுக்கொண்டது என்று கூறுவது அசட்டுத்தனமானது. ஆதாரமற்றது. விஞ்ஞான ரீதியாக நிலைநிறுத்த முடியாதது. மேலும் உலகப்புகழ் பெற்ற "சூரிய சித்தாந்தம்" என்ற நூலை எழுதிய ஆரியபட்டர், வராஹமிஹிரருக்கு முன்பு வாழ்ந்தவர். இவருடைய சித்தாந்தத்தையும் மற்றும் நான்கு சித்தாந்தங்களையும் ஆராய்ந்து ஸ்ரீவராஹ மிஹிராச்சார்யார் தம்முடைய "பஞ்சசித்தாந்திகா" என்ற நூலை எழுதியுள்ளார். வராஹமிஹிரர், மஹாகவி காளிதாஸருடன் உஜ்ஜயினியில் விக்கிரமாதித்தனுடைய ராஜ சபையில் வாழ்ந்தவர். காளிதாஸர் தாம் எழுதிய "ஜோதிர் விதாபரண" த்தில் வராஹமிஹிரரை "நவரத்தினங்களில்" ஒருவராகக் குறிப்பிட்டிருக்கிறார். காளிதாஸர் தாம் இந்த நூலைக் கலியுகாதி 3068வது வருஷத்தில் எழுதியதாக,

*"வர்ஷே ஸிந்தூர தர்ஸனாம்-*
*பரா குணைர்*
*யதே கலான் ஸம்ஸ்திதே மாஸே*
*மாதவ ஸஞ்நிதே த்ர விஹிகோ*
*கிரந்த கிரியோபக்ரம:"*

என்று குறிப்பிட்டிருக்கிறார். கவி கி.மு. 3102ல் ஆரம்பித்ததால், காளிதாஸரும், வராஹமிஹிராரும் கி.மு. 34ல் வசித்ததாக இதனால் ஏற்படும். ஆகையால் ஆரியபட்டர் இதற்கும் முன்பு இருந்தார் என்று ஏற்படும். மேலும் வராஹாமிஹிராச்சாரியார் தம்முடைய "பிருஹத் ஸம்ஹிதையில்" "ஆஸ்லே ஷார்த்தா தக்ஷிணம் உத்தரம் அயனம் ரவேர் தனிஷ்டாத்யான். நூனம் கதா சிதாவித் யேனோக்தம் பூர்வ சாஸ்திரேஷு" என்று "வேதாங்க ஜோதிஷத்"தில் கூறியதையே திரும்பக்கூறுகிறார். மேலும் தமது பிருஹத் ஜாதகத்தில்" "யவனர்"களைப் பற்றியும் "யவனாச்சாரியாரை" பற்றியும் குறிப்பிட்டு அவர்கள் கொள்கை தமக்கு சரியாகப்படவில்லை என்று கும்ப லக்னப் பலன்களை பற்றிக் கூறும் போது சொல்லுகிறார். "யவனர்கள்" என்பது கிரேக்கர்கள் என்றும் "யவனாச்சாரியார்" என்பவர் கிரேக்கர்களுக்கு ஆசார்யராக இருந்து ஜோதிஷம் சொல்லிக் கொடுத்தவர் என்றும் கூறுகிறார்கள். இவற்றாலெல்லாம் இந்து தேசத்து ஜோதிடமும் வான சாஸ்திரமும் கிரேக்கரக்ள் இந்தியாவுக்கு வருவதற்கு பல ஆயிரம் ஆண்டுகள் முன்பே ஏற்பட்டன என்பதும் விளங்கும். மேலும் ஜோதிஷத்தின் வேர் போன்ற பராசர மஹரிஷி எழுதிய "பராஸா ஹோரா சாஸ்திரம்" என்பது "பாரதம்" எழுதிய வியாஸரின் தந்தையான பராசரரால் எழுதப்பட்டது. இன்றும் ஜோதிடர்களுக்கு இன்றியமையாதது. இது "பாரதத்தினும்" தொன்மையானது. ஸத்யாச்சாரியார் எழுதிய "துருவநாடி" "பஞ்சசித்தாந்தம்" இவைகளும் இதே காலத்தில் எழுதப்பட்டவை. இவைகளை வராஹமிஹிரர் முதலியோர் மேற்கோள் காட்டியுள்ளனர். இவையே நம்மிடமிருந்தே கிரேக்கர்கள் ஜோதிஷ வான சாஸ்திரங்களைக் கற்றுச் சென்றனர் என்பதற்குச் சான்றுகளாகும்.



# பகவத் கீதை பிறந்த குருக்ஷேத்திரம்

**"சன்மிஷ்டை"**

டில்லிக்கு வடக்கே உள்ள ஹிமயமலை அடிவாரப்பகுதியில் முன் காலத்தில் குருகுல மன்னர்கள் ஆண்டு வந்தார்கள். அவர்களது தலைநகராக அப்போது குருக்ஷேத்ரம் விளங்கி வந்தது.

இந்த குருக்ஷேத்திரம் டில்லிக்கு வடக்கே 156 கிலோ மீட்டர் தொலைவில் அம்பாலா, சண்டிகர், கால்கா, சிம்லா செல்லும் இருப்புப் பாதையில் அமைந்துள்ளது. குருக்ஷேத்ரத்திலிருந்து 32 கிலோ மீட்டர் வடக்கே அம்பாலா, 110 கிலோ மீட்டர் வடக்கே சண்டிகர், 147 கிலோ மீட்டர் வடக்கே கால்கா உள்ளன.

இவை எல்லாம் முன் காலத்தில் "குரு" - ராஜ்யத்தின் எல்லைக்குட்பட்டிருந்தவை எனக் கருதப்படுகிறது. டில்லியிலிருந்து குருக்ஷேத்திரம் செல்லும் வழியில் "நரேலா" வில் சுவாமி பாமாநந்த சரஸ்வதி ஸ்தாபித்த கன்யா குருகுலம் ஒன்று உள்ளது. அங்கே இப்போது மகா பாரத கால நாணயங்கள், ஆயுதங்கள், பாத்திரங்கள் முதலியவற்றைச் சேகரித்து வைத்துள்ளார்கள். குருக்ஷேத்திரத்தில் சர்வகலாசாலை ஒன்று நிறுவப்பட்டு மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

## குருக்ஷேத்திரம்

"கலங்காமல் கடமையைச் செய்வாய்! பலனை எதிர்பாராதே..........!" என்கிற குறிக்கோளை மனித வரக்கத்தின லக்ஷ்யமாகக் கொள்ள வேண்டுமென்று கண்ணன், தளர்ந்து கிடந்த அர்ஜுனனுக்கு உபதேசித்து உள்ளத்திற்கு உரமேற்றினான். கடும் போரின் சூழ்நிலையில், உள்ளப் போராட்டத்தின் சூழ்ச்சியில் அமர "கீதை" பிறந்தது. பிறந்த இடம் அமர களம்: அதுவே குருக்ஷேத்திரம் எனப்படும்.

மகாபாரதக் காலத்திற்கு முன்பே குருக்ஷேத்திரம் பெருமையும் முக்யத்துவமும் பெற்ற புண்ணிய பூமியாகும். தேவர்களும் முனிவர்களும் இங்கு யாக, யக்ஞங்கள் செய்ததாகத் தெரிய வருகிறது.

"குரு" என்கிற மன்னன், பொன் கலப்பையால், இப்பிரதேசத்தை உழுத காரணத்தினால் - "குருக்ஷேத்திரம்" என்கிற பெயர் வரலாயிற்று. மன்னன் குரு இங்கு ஒரு வேள்வி - யாகம் செய்தான், அங்குள்ளவர்கள் யாவரும் சுவர்க்கம் செல்ல வேண்டும் என்கிற விருப்பத்தோடு. மேற்கொண்டும் அந்நிலத்தை உழுத வண்ணமாக இருந்தான். இதைப் பார்த்ததும் இந்திரனுக்குச் சிரிப்பு வந்தது. யாகம் செய்யாதவர்களுக்கு சுவர்க்கத்தில் இடமில்லை என்பது தேவர்களின் பிடிவாதம்! குருவின் விடாமுயற்சியும ஆர்வமும் அவனுக்கு வெற்றியைத் தேடித்தந்தன. இந்திரன் சமரஸத்திற்கு வந்தான். அந்தப் பூமியில் ஒருவன் வேள்வியின் போதோ அல்லது போரிலோ மடிந்தால். அவனுக்கு சுவர்க்கத்தில் ஓரிடம் கண்டிப்பாகத் தரப்படவேண்டும் என்று ஒப்புக்கொள்ளப்பட்டது. அதிலிருந்து குருக்ஷேத்திரம் ஒருங்கே சமர பூமியாகவும் - யாக நிலையமாகவும் ஆயிற்று.

சாதாரணமாக வழக்கத்தில் "குருக்ஷேத்திரம்" என்றால் போர்க்களம் என்றே பொருள் படுகிறது. அது வெறும் போர்க்களமல்ல! அறம் வளர்க்கும் நிலமும் (தர்ம க்ஷேத்திரம்) ஆகும். மகா பாரதப் போர் நடந்தது இங்கே தான். எது அழிந்தாலும், தர்மமே நிலைக்கும் என்கிற பேருண்மையை இந்த க்ஷேத்திரம் ஸ்தாபித்தது.

மகாபாரதப் போர் உண்மையில் நடந்த நிகழ்ச்சியாகும். அது எப்போது நடந்தது? கிறிஸ்து பிறப்பதற்கு முன்பு 3101ஆம் வருஷங்களிலிருந்து 1193ஆம் வருஷங்களுக்குள்ளாக நடந்திருக்கக்கூடுமென அறிஞர்கள் கருதுகிறார்கள். மகா பாரதக் கதையில் கொடுக்கப்பட்டுள்ள விபரங்கள் தெளிவாக இல்லாமல் ஒன்றுக்கொன்று முரணாக இருக்கிறது.

கலியுகம் பிறந்த ஆண்டாகக் கருதப்படும் கி.மு. 3101-ல் இப்போர் நடந்திருக்கும் எனப் புராணங்கள் கூறுகின்றன. சாகா சகாப்தம் யுதிஷ்டிரர் காலத்திற்கு - 2526 வருஷங்களுக்குப் பின் தொடங்குவதால் பாரதப்போர் கி.மு. 2449-ல நடந்திருக்க வேண்டுமென்பது ஆராய்ச்சியாளர்களின் ஏகோபித்த துணிபு.

ஏழு வனங்களையும், அநேக தீர்த்தங்களையும் கொண்டது குருக்ஷேத்திரம். இவை யாத்திரிகர்களுக்குப் புண்ணியம் தேடித்தருபவை. சமரில் மடிந்த மக்களுக்கும், பந்துக்களுக்கும், தர்ப்பணமும் சிரார்த்தமும் இங்கே செய்வதை விசேஷமாக இந்துக்கள் சொல்கிறார்கள். இங்கு அமாவாசை மிக முக்கியம். எல்லாப் புண்ணிய நதிகளும் அன்று இங்கே சேர்வதாக ஐதீகம்! கிரகண காலங்களில் இங்கே கூடும் கூட்டம் - "மக்கள் கடல்' ' போல் காட்சி தரும்.

சூரிய கிரணம் என்றால் சொல்ல வேண்டியதே இல்லை அந்தப் புனித நேரத்தில் "சூரிய வைகுண்டம்" என்ற பொய்கையில் ஸ்நானம் செய்தால் பிறவிப்பிணி நீங்கி, பேரின்பம் கிடைக்கிறது என்பது ஹிந்துக்களின் முழு நம்பிக்கை.

புண்ணிய நதியான ஸரஸ்வதி, ஒரு காலத்தில் குருக்ஷேத்திரத்தின் அருகில்தான் ஓடிக்கொண்டிருந்தது. அது இன்று, ஏன்? வெகு காலத்திற்கு முன்பே மறைந்து விட்டது. ஆனால், அதன் புகழ் மட்டும் மங்கவில்லை.

குருக்ஷேத்திரம் புராண மகிமையோடு சரித்திரப் புகழும் கொண்டது. இன்றைய டில்லிதான் அன்று ஹஸ்தினாபுரமாக விளங்கியது. அதற்கு அருகே உள்ள குருக்ஷேத்திரம் ரணகளம், குருக்ஷேத்திரத்தில் வெற்றி பெற்றவரே ஹஸ்தினாபுரத்தை ஆள்பவர். "ஹஸ்தினாபுரத்தின் தலை எழுத்து குருக்ஷேத்திரம்" என்பது இன்று வரை இருந்து வருகிற உண்மை.

குருக்ஷேத்திரத்தின் மத்தியிலுள்ள ஸ்தானேஸ்வரம் மிகவும் சீரும் சிறப்பும் வாய்ந்தது. ஹர்ஷ சக்கரவர்த்தியின் வம்சம் ஸ்தானேஸ்வரத்தில் இருந்து வந்ததே! இந்தச் சிறப்பை கவி பாணன், "ஹர்ஷ சரித்திரம்" என்கிற அமர நூலில் அழகாக வர்ணித்துள்ளார். கி.பி. 1014ல் ஸ்தானேஸ்வரத்திலுள்ள கோயில்களையெல்லாம் இடித்து, அந்நகரைக் கைப்பற்றினான் கஜினி முகமது. பின்னால் இதனருகே உள்ள பானிப்பட்டில் நடந்த மூன்று போர்களில் இந்தியாவின் நிலைமை எப்படி மாறியது என்பதைச் சரித்திர வாயிலாகக் காண்கிறோம். முதல் இரு போர்கள் முகலாய ஆட்சியையும், மூன்றாவது போர் பிரிட்டிஷ் ஆட்சியையும் இந்தியாவில் ஸ்தாபித்தன.

இன்றைய குருக்ஷேத்திரம் எப்படி இருக்கிறது? தமிழ்நாட்டில் உள்ளது போன்ற கோயில்களையோ அல்லது நினைவுச்சின்னங்களையோ அங்கே காணமுடியாது. குருக்ஷேத்திரம் என்கிற ரயில்வே ஸ்டேஷனில் இறங்கினால், பாரத காலத்தை நினைவூட்டும் குதிரைகளையும், டோங்கா வண்டிகளையும் தான் காணமுடிகிறது.

ஸ்டேஷனிலிருந்து எட்டு கிலோ மீட்டர்களுக்குள்ளே ஒரு இடத்தை மணல் காட்டை - "குருக்ஷேத்திரம்" என்கிறார்கள். இன்னொரு இடத்தை "கீதோபதேசம்" நடந்த இடமாகச் சொல்லுகிறார்கள். இங்கே ஒரு ஆசிரமம் இருக்கிறது. அதிலே உள்ள ஒரு பெரிய ஆலமரத்தடியில் "கண்ணனும் அர்ஜுனனும் தேரிலே இருக்கும் நிலை"யைச் சித்தரிக்கும்ஓரடிச்சிலை உள்ளது. இதைத்தான் மக்கள் பக்தி சிரத்தையுடன் வழிபடுகிறார்கள்.

பாகிஸ்தான் பிரிவினையின் போது ஹிந்து - முஸ்லீம் கலவரத்தில் மிகவும் பாதிக்கப்பட்ட இடங்களில் இதுவுமொன்று. இப்போது ஒரு காலத்தில் சீரும் சிறப்பும் பெற்ற இந்த இடத்தில், சாலைகள் அமைத்து சோலைகள் விளங்க ஆக்க வேலைகள் நடைபெற்று வருகின்றன.

மக்கள் வாழ கண்ணன் காட்டிய வழி அருமையானது; தன்னலமற்றது; வளம் பொருந்தியது. ஆனால், கீதை பிறந்த இடமான குருக்ஷேத்திரத்தைப் பார்க்கும்போது இந்த இடத்திலா அது பிறந்தது என்று நினைக்கத் தோன்றுகிறது.

இனி, மகா பாரதக் காலத்திய பரீக்ஷித் நகரைப் பார்ப்போம். இதுவும் குரு வம்சத்தின் சந்ததிகளைப் பற்றிய முக்கிய க்ஷேத்திரங்களாகும். இதிலிருந்து பல செய்திகள் - கருத்துக்கள் கிடைக்கின்றன. சிறிது ஆராய்வோம்.

### பரீக்ஷித்

குருகுல மன்னர்களுள் பரீக்ஷித்தும் ஒருவர். அவரது தலைநகராக விளங்கிய ஊரின் பெயர் பரீக்ஷித் நகர். டில்லியிலிருந்து சஹாரன்பூர் செல்லும் ரயில் பாதையில், டில்லியிலிருந்து 68 கிலோ மீட்டர் தூரத்தில் "மீரட்" என்ற முக்கிய நகரம் உள்ளது ஹிமயமலை அடிவாரத்திலுள்ள "சஹாரன்பூர்" அங்கிருந்து 113 கிலோ மீட்டர் வடக்கேயுள்ளது. மீரட் நகருக்குக் கிழக்கே இந்த பரீக்ஷித் நகர் உள்ளது.

குருக்ஷேத்திரம யமுனை நதிககு மேறகே உளளது. பரீக்ஷதநகர கிழககே உளளது. இரணடுக கும் இடையில் உளள தூரம சுமார 85 கிலோ மீட்டர.

## ஹஸ்தினாபுரம்

பரீக்ஷத் நகருக்கு வடககே ஹஸ்தினாபுரம், தெறகே கர முக்தேஸ்வர உள்ளன. கிழக்கே 10 கிலோ மீட்டர் தொலை வில் புணணிய நதி கங்கை ஓடுகிறது. பரீக்ஷிதநகரில் ஒரு பழமையான கேணி இப்போது ஜீரண தசையில் உள்ளது. குஷ் டரோகிகள பலர இக்கேணி யைத் தேடி வந்து இந்நீரில் குளிக்கிறாரகள். இப்படி இநத நீரில் தொடர்ந்து குளித்து வந்தால் 18 வகையான குஷ்டங கள் நீங்கி வருவதாகச் சொல் கிறார்கள். இந்தக் கிணற்றின் பெருமை குறித்து ஒரு பழைய வரலாறு ஒன்றும் உண்டு.

## நவலதே

பரீக்ஷத் மகாராஜாவுக்கும், பாதாளலோக மன்னனும் - நாக வம்சத்தைச் சேர்ந்தவனு மான வாசுகிககும் நெருங் கிய நட்பு உண்டு. வாசுகிக்கு முதன் முதலில் ஒரு பெண்கு ழந்தை பிறநதால் அதைப் பரீ க்ஷத்துக்கு மணம் முடித்துத தருவதாக வாசுகி வாககளித தான். அதன்படியே வாசுகிக்கு முதலில் ஒரு பெண் பிறந் தாள். "நவலதே" என அவ ளுக்குப் பெயரிட்டான்.

ஆனால், தான் வாக்களித்த படி நவலதேயை பரீக்ஷித்துக்கு மணம் முடித்துத்தர வாசுகிக்கு மனம் வரவில்லை. பரீக்ஷித் அப் போது ஓரளவு வயோதிக நிலை யில் இருந்ததுதான் அதற்குக் காரணம்.

கொடுதத வாக்கைக் காப பாறறாத காரணததால வாசு கியை குஷடம பறறிககொண டது. அவன மிகுநத மனவியா கூலம அடைநதான. குஷடத தில இருநது தனனை விடு விததுககொளள விருமபி அவன தவம் இருநதான். தெயவம அவன் முன் தோனறி பரீ க்ஷித்நகரில ஒரு கேணி இருப்ப தாகவும், அங்குச் சென்று அந்த நீரை அவன் மகளான நவ லதே கொண்டு வந்து அதில அவன் குளித்தால குஷ்டம் முற் றிலும் நீங்கி விடும் என்று கூறி மறைநதுவிட்டது.

வேறு வழியின்றி மாறுவே டத்தில நவலதேயை - பரீக்ஷித் நகரக்கு வாசுகியை அனுப்பி வைததான். அந்தக் கிணற் றுக்கு பரீக்ஷித காவல் போட் டிருந்தான். இதனால் காவ லாளிகளிடம் நவலதே சிக்கிக் கொணடாள். அவர்கள் தங் கள் மன்னான பரீக்ஷித்தின் முன் கொண்டுபோய் நிறுத்தி னார்கள். அவளை அவன் விசா ரித்த போது உண்மை விவரங் களைக் கூறி விட்டாள் அவள்.

தனக்கு, ஏற்கனவே வாக்க ளிக்கப்பட்ட பெண்தான் நவ லதே என அறிந்து மகிழ்ந் தான் பரீக்ஷத். தன் தந்தை யின் குஷ்டத்தைப் போக்கிவிட் டுத் திரும்பி வந்து அவனை மணந்து கொள்வதாக வாக்க ளித்துக் கிணற்று நீருடன் நாக லோகம் திரும்பினாள் அவள். பரிக்ஷித்நகர் கிணற்று நீரில் குளிததும் வாசுகியிடம் குஷ் டம் நீங்கியது. தான் வாக் களித்தபடியே வாசுகி தானே முன் நினறு நவலதேயை பரீ க்ஷித்துக்கு வெகு கோலாகல மாக மணம் செய்து தந்தான்.

காலசசககரம உருணடோடி யது.

பரீக்ஷிதநகர அநகே உளள காட்டில கௌசிகி நதிககரை யில "லோமஸ" என்ற ஒரு ரிஷி வாழநது வநதார. அவர ஒரு நாள நிஷடை-தபஸில் இருந தபோது, அநத வனததில வேட்டையாடி விட்டு அபபகக மாக வநத பரீக்ஷித மனனன, தனககு மரியாதை செய யாது லோமஸ ரிஷி அமரந திருப்பதைக கணடு, கடுஙகோ பம் கொணடு, இறந்த சரப் பம் ஒன்றை எடுத்து அவருககு மாலையாக அணிவித்து மகிழ்ச சியுடன் சென்றான், அரணம னைக்கு.

கண் திறந்து பார்த்தார் லோமஸ் ரிஷி. கடுங்கோபம் கொண்டார். தனக்கு மாலை யாக எந்தப் பாம்பை பரிக்ஷித அணிவித்தானோ, அதே பாம் பால் அன்றிலிருந்து ஏழாவது நாள்கடிபட்டு இறப்பான் எனச் சாபம் இட்டார் அவர். எவ்வ ளவோ பாதுகாப்பாக மன்னன் இருந்தும் அநதச்சாபப்படி ஏழா வது நாள் சர்ப்பம் தீண்டி பரீ க்ஷித் மன்னன் மாண்டான்.

தன் தகப்பன் பாம்பால் கடி பட்டு இறந்ததை அறிந்து பரீ க்ஷித்தின் மகன் ஜனமே ஜயன், உலகில் பாம்பே இல்லாது ஒழித்துக்கட்டி விடுவது எனச் சபதம் ஏற்றான். தன் சப தத்தை நிறைவேற்ற பெரும் செலவு செய்து "சர்ப்பயாகம்" ஒன்றைச் செய்தான். அதில் ஏராளமான சர்ப்பங்கள் வந்து விழுந்து மடிந்தன. இப்படி ஜனமே ஜயன் சர்ப்பயாகம் செய்த இடம் பரீக்ஷித்நகரில் இன்றும் உள்ளது; சென்றால் பார்க்கலாம.

### காந்தாரி தால்

பரீக்ஷித நகரில் - "காந்தாரிதால்" என்ற ஒரு குளமுள்ளது. பரீக்ஷித்துக்குப் பட்டாபிஷேகம் நடந்த போது, இந்த குளத்தில்தான் அவன் ஸ்நானம் செய்தான். இப்படி அவன் அந்த குளத்து நீரில் ஸ்நானம் செய்வதற்கு முன்பு - பாரத தேசத்தில் உள்ள 60 தீர்த்தங்களிலிருந்த புனித நீர் கொண்டு வரப்பட்டு அந்தக்குளத்தில் சேர்க்கப்பட்டது. இந்த புனித குளக்கரையில் தான் திருதராஷ்டிரன் மனைவியான "காந்தாரி" தவம் இருந்தாள். அங்குள்ள கங்கேஸ்வரர் ஆலயத்தில்தான் அவள் இவ்விதம் தவம் இருந்தாள். அதாவது "தான் எந்த ஆடவனை முதன் முதல் பார்க்கிறேனோ, அவன் வைரம் போன்ற உறுதி பெற வேண்டும்" என்ற வரமும் பெற்றாள். இதனால்தான் இக்குளத்திற்கு "காந்தாரிதால்", எனக்கூறப்படுகிறது. இன்றும் அந்த காந்தாரிதால் பரீக்ஷிதநகரில் உள்ளது. அதிலுள்ள பச்சைப் பசேலென்ற மரங்கள் ஏரியைச் சுற்றிலும் காணப்போர் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளுகின்றன.

### கோமேஸ்வரர் ஆலயம்

பாண்டவர் - கௌரவருக்கு இடையே ஸ்ரீகிருஷ்ண பகவான் தூது சென்ற போது, ஒரு சமயம் பரீக்ஷிதநகரில் சிறிது நேரம் தங்கியிருந்தார். அந்த இடத்தில் கோமேசுவர் என்ற ஓர் ஆலயம் எழுப்பப்பட்டுள்ளது.

பரீக்ஷிதநகருக்கு யாத்திரீகர்களைக் கவர அந்த ஊரில் உள்ள இளைஞர்கள் "காந்தாரிதால் சமிதி" என்ற ஒரு சங்கம் இப்போது அமைத்துள்ளார்கள். இந்தச் சங்கத்தின் முயற்சியால் சமீபத்தில் காந்தாரிதால் ஏரிக்கரையில் "காந்தாரிசிலை" யொன்று அமைக்கப் பட்டுள்ளது. உத்தரப் பிரதேச அரசாங்கம் பரீக்ஷிதநகரை இன்னும் புனருத்தாரணம் செய்யும் பணியில் அவர்களுக்கு ஊக்கமும் ஒத்துழைப்பும் அளித்து வருகிறது; மத்திய அரசாங்கமும் பலமானியங்களை வழங்கியுள்ளது என்பதை இங்குக் குறிப்பிடவிரும்புகின்றேன்.



---

(16-ஆம் பக்கத் தொடர்ச்சி)

சுந்தரர் எழுந்து, "இவ்வாறு பல தடவை என்னை மிதிக்கும் நீர் யார?" என்று கோபமுடன் கேட்டார். உடனே முதியவராக வந்த இறைவர் "என்னை இன்னும் நீ அறிந்திலையோ", என்று கூறியவாறு மறைந்தருளினார். சேக்கிழார் இக்காட்சியை,

"அங்கும் அவன் திருவடிமேல்
மீட்டும் அவர்தாள் நீட்டச்
செங்கயல்பாய் தடம்புடைசூழ்
திருநாவலூர் ஆளி
'இங்கென்னைப் பலகாலும்
மிதித்தனை, நீயார்?' என்னக்
கங்கை சடைக் கரந்தபிரான்
'அறிந்திலையே' எனக்கரந்தான்.
[-பெரிய-87]

அம்மொழியைக் கேட்ட சுந்தரர் திடுக்கிட்டார். அம்முதியவர் இறைவரே என்பதை உணர்ந்தார். 'என் முடியின் மீது திருவடியை வைத்தவர் சிவபெருமானே, என அறியாது போனேனே! இறுமாப்பு அடைந்து என்ன காரியம் செய்தேன்?' என்று எண்ணிப் பலவாறு வருந்தினார். உடனே, 'தம்மானை அறியாத சாதியர் உளரே' எனத் தொடங்கும் திருப்பதிகாரத்தைப் பாடினார. அங்கிருந்தபடியே திருவதிகை வீரட்டானத்துள் எழுந்தருளியுள்ள பெருமானை வாழ்த்தி வணங்கித் துதித்தார். பின்னர் அவ்விடம் விட்டுச் சென்றுர்.

இவ்வாறு சுந்தரமூர்த்தி சுவாமிகட்குத் திருவடி சூட்டப்பெற்ற பெருமை மிக்கது சித்தவடமடம் என்னும் இத்திருத்தலம் ஆகும். இறைவனுடைய திருவருளை ஆன்மாக்கள் பெறற்குரிய இடம் திருக்கோயிலே என்பது சான்றேர் கருத்து.

பசுவின்பால் உடல் முழுவதும் பரவி இருந்தாலும் அதனை நாம் பெறுவது பசுவின் மடியின் இடத்தேதான். இவ்வுலகம் முழுவதும் சிவனருள் பெருகி இருப்பினும அதனைப் பெறுவதற்குரிய இடமாய் இருப்பது திருக்கோயில ஒன்றுதான்.

"எங்கும் சிவனிருப்பான் ஆனாலும்
ஏற்ற
சங்மத்தும் சற்குருவின்
தன்னிடத்தும்-லிங்கத்தும்
ஆவினுடம் பெல்லாமும்
ஆவரித்து நிற்கினும்பால்
பாவுமுலைக் கண்மிகுதிப் பார்
-சிவஞானப் பிரகாச வெண்பா

எனவே சுந்தரர் இத்திருத்தலத்தின்தான் இறைவனின் திருவடிதீட்சையை ஏற்றுர். தீட்சைகள் பலவகைப்படும். அவற்றில் மூன்று முக்கியமானது ஸ்பரிஸ தீட்சை, நயன தீட்சை, மானசீக தீட்சை என்பவையாகும். சுந்தரமூர்த்தி சுவாமிகட்கு இங்குதான் ஸ்பரிஸ தீட்சை கிட்டியது. அத்தகைய சிறப்புடைய தலம் சித்தவடமடம் ஆகும். ●

# பெருமாள் கோவில் வழிபடும்முறை

திரு. D. கேசவ அய்யங்கார் - அல்லூர்.



முன்னுரை :

இவ்வுலகில் நடந்து வரும் ஒவ்வொரு செயலையும் நன்கு கவனித்தால், அச்செயல்கள் எல்லாமே, ஏதோ ஒரு நியதி அல்லது முறைப்படித்தான் நடந்து வருகிறது என்பது நன்கு புலனாகும். உதாரணமாக சாலையில் நடப்பதற்குகூட முறை, (நியதி) இருக்கிறது. சாலையில் நம் மனம் போன போக்கில் நடக்காமல், சாலையின் இடது புறத்தில் தான் நடக்கவேண்டும் என்ற நியதி உண்டு. பெரிய பாதைகளில் நடைபாதை என்று இருந்தால், அந்த நடை பாதையில்தான் நடக்க வேண்டும் என்பது நியதியாகும். பள்ளிக்கோ, அலுவலகங்களுக்கோ செல்வதற்குக்கூட, 'சீருடைகளுடனும்' அலங்கோலமில்லாத சுத்தமான ஆடைகளை உடுத்திக் கொண்டுதான் செல்ல வேண்டும் என்ற முறை இருக்கிறது. நாம் ஆகாரங்களை உண்ணுவதற்கு கூட முறை உண்டு. முதலில் அன்னத்தில் சாம்பார், ரசம் என்றும், பதார்த்தங்கள் பிறகு என்றும், கடைசியாகத்தான் மோர் அல்லது தயிர் சாதம் சாப்பிடவேண்டும் நியதி இருக்கிறது. இதில் முன்னுக்குப் பின்னாக யாரும் உண்ணுவதில்லை. இசைத்துறையை எடுத்துக்கொண்டாலகூட இசை விழா ஆரம்பம், கௌளை, ஹம்சத்வனி, நாட்டை போன்ற ஏதாவது ஒரு ராகத்தில் வரணம் பாடி, அல்லது இந்த ராகங்களில் விழாவை ஆரம்பித்து, மத்யமாவதி, சுருட்டி, ஸ்ரீராகம் ஏதாவது ஒன்றில் முடிக்க வேணும் என்பர். இவைகளுக்கெல்லாம் இவ்விதமாக ஒரு முறை நியதி இருக்கும்போது, வழிபாடு இடமாக விளங்கும் கோவில்களை வணங்குவதற்கும் முறை நியதிகள் உண்டா என்றால், இருக்கிறது என்றும், ஆனால் அந்த வழிபாட்டு முறையை நன்கு அறிந்தவர்கள்தான் குறைவு என்றும் சொல்ல வேண்டியுள்ளது. 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது

முதுமொழியாகும். ஆனால் நம் தமிழ் நாட்டில் அநேக மாக எல்லா ஊர்களிலும் ஏதா வது ஒரு கோயில் இருக்கும். சில பெரிய ஊர்களில் ஒன் றுக்கு மேற்பட்ட கோவில்களும் இருக்கலாம். அவைகளில் சில பெருமாள் கோவிலாகவும் , சில சிவன் கோவிலாகவும் இருக்கும். நாம் வைணவ சித்தாந்தத்தை சார்ந்தபடியால், பெருமாள்கோ விலை வழிபடும் முறையை சிறிது அறிந்து கொள்வோம்.

தற்காலத்தில் நம் நாட் டில் பக்தி அதிகரித்திருக்கிறதா இல்லையா என்ற விவாதம் நமக்கு வேண்டாம். அதை பட்டிமன்றங்களுக்கே விட்டுவிடு வோம். ஆனால் ஆலயங் களுக்குச் செல்வோரின் எண் ணிக்கை, முன்பு இருந்ததைவிட அதிகமாய் உள்ளது என்பது நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். அநேகமாக இதை யாரும் மறுப் பதற்கில்லை என்னலாம். நம் நாட்டில் உள்ள அநேகம் பெரு மாள் கோவில்களில் சில ஆழ் வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டு, "திவ்ய தேசம்" என்ற பெயருடன் விளங்குகின் றன. சில ஊர்கள், ஆழ்வார், ஆசார்யர்கள் யாராவது அவ தாரம் செய்ததினாலேயே, அந்த ஊர் கோவில்கள் விசேஷமுடை யதாகின்றன. இன்னும் சில பெருமாள் கோவில்கள், மக்க ளின் அபிமானத்தைப் பெற்ற, "அபிமானஸ்தலங்களாக" விளங் குகின்றன, பெருமாள் கோவில் களை காலையில் வழிபடுவது சாலச் சிறந்தது என்பது பெரி யோர் கருத்தாகும். இனி பெரு மாள் கோவில்களை வழிபடும் முறையை ஓர் அளவுக்கு தெரிந் துகொள்வோம். பெருமாள் கோவில்களுக்கு அது எந்த கோவிலானாலும் சரி, வாகனங் களில்போனால், கோயிலுக்குச் சிறிது தூரத்திலேயே வாகனங் களை விட்டிறங்கி கோவிலுக்கு நடந்துதான் போக வேணும். கோவிலுக்குப் போகும் போது குளித்து, சுத்தமான ஆடைகள் அணிந்து கொண்டு செல்ல வேணும். பாதரக்ஷைகளு டன் போனாலும், கோவி லுக்கு சிறிது தூரத்திலேயே பாதரக்ஷைகளைக் கழற்றிவிட்டு வெறுங்கால்களுடன்தான் போக வேண்டும். ஸ்ரீராமானுஜர்கூட பாதரக்ஷையுடன் கோவிலுக்குச் சென்றால் பாதரக்ஷையை கழற் றிவிட்டு விடுவார். அந்த பாதரக்ஷைகளை மூட்டையாகக் கட்டி தலையில் சுமந்து வரு வது அவர் சீடரான வடுகநம்பி யின் கைங்கர்யமாகும் என்பதை இங்கு நினைவில் கொள்ள லாம்.

அந்தந்த கோவிலை சார்ந்த திருக்குளங்

களும், புனித நீர் நிலைகளும், புண்ணிய நதிகளும் இருக்குமா னால், அந்த தீர்த்தங்களில் நீரா டிவிட்டு, உலர்ந்த ஆடைகளை அணிந்து கொண்டு, "கேச வாதி பன்னிருநாமாக்களை" உச் சரித்து, த்வாதச புண்டரங் களை இட்டுக்கொள்ளவேண்டும். பாழ்நெற்றியுடன் பெருமாளை சேவிக்கலாகாது. சந்த்யா வந்தனாகி, நித்யகர்மானுஷ்டா னங்களை முடித்துக்கொண்டு, "திருமந்த்ரம், த்வயம், சரம ஸ்லோகம்" முதலியவைகளை யும், வாக்கிய குருபரம்பரையை யும் ஸ்லோக குருபரம்பரை யையும் அனுஸந்தானம் செய்ய வேணும். தீர்த்தமாட சந்தர்ப்ப மில்லாவிடில், அந்த ஸ்தலத்தி லுள்ள புனிதநீரை தலையில் தெளித்துக்கொண்டு, ஆசமனம் செய்ய வேண்டும். பெரியோர் கள், குரு, குழந்தைகள், நோயா ளிகள் ஆகியோர்களைப் பார்க் கச்செல்லும்போதும், கோவில் முதலிய இடங்களுக்கு செல் லும் போதும் வெறுங்கை யுடன் போகலாகாது என்ப தற்கிணங்க, அவரவர்கள் சக் திக்கு இணங்க யதாசக்தி உப காரமாக தேங்காய், பழம், கற்கண்டு, வெற்றிலைபாக்கு, புஷ்பம், துளசி முதலியவை களில் ஏதாவது எடுத்துக் கொண்டு செல்லவேண்டும். கோபுரங்களைப் பார்த்த உட னேயே கீழே விழுந்து தண்டன்- சமர்ப்பிப்போரும் உண்டு. சந் நிதியை அடைந்ததும், கோபு ரராஜனை சேவிக்க வேண் டும். பலிபீடம், தவஜஸ்தம் பம் பெரிய திருவடி, விஷ்வக் சேனர், ஹயக்ரீவர், கஜலக்ஷ்மி இவர்களை முறையே சாஷ்டாங் கமாக தண்டன் சமர்ப்பித்துக் கொண்டு, உட்புறம் பிரதக்ஷ ணம் செய்யும்போது, விமானத் தின் நிழலை மிதியாமல் பிரத க்ஷிணம் செய்யவேணும். தனி யாக "திருமடைப்பள்ளி" இருந் தால் "திருமடைப் பள்ளி நாச் சியாரை" சேவிக்க வேணும். பின் ஆழ்வார் சந்நிதிகளையும், ஆசார்ய புருஷர்கள், சேனை முதலியார் ஆகியோர் சந்நிதி களை சேவித்துக்கொண்டு மகா மண்டபத்தின் இருபக்கங்களி லும் உள்ள ஜய, விஜயர்களான த்வாரபாலகர்களை சேவித்து, மனதினால் அவர்களிடம் 'அடி யேன், பிராட்டியார் (தாயார்) பெருமாளை சேவிக்கவேணுமா கையாலே, உள்மண்டபத்தை தாண்டி கர்ப்பகிருஹத்திலிருக் கும் ஸ்வாமியை சேவிக்க அனு மதி அளிக்க ' வேண்டும்' என்று பிரார்த்தித்து, அவர அனுமதி அளித்ததாக எண்ணிக் கொண்டு, குலசேகரன் படியை சேவித்துக்கொண்டு, உள்ளே சென்று தாயாரை சேவித்துக்

கொண்டு, தாயாரை புருஷாகாரமாகக் கொண்டு பெருமாளை சேவிக்கவேணும். தாயாயருக்கெனத் தனிக்கோயில் இருக்குமேயானால், சுற்றுக்கோவில்களை சேவித்தபிறகு, தாயாரை சேவித்து கொண்டு பிறகே பெருமாளை சேவிக்க வேண்டும். இப்படிக் கோபுரம், விமானம் மண்டபம், பெருமாள், பிராட்டி, பரிவார தேவதைகள் முதலியவைகளை சேவிக்கும் போதெல்லாம், "ஸர்வ மங்கள விக்ரஹாய ஸமஸ்த பரிவாராய, ஸ்ரீமதே நாராயணாய நம: " என்றும் சேவிக்க வேண்டும். பெருமாளை திருமுடி முதல் திருவடி வரை, திருப்பாணாழ்வார் அருளிச்செய்துள்ள ப்ரபந்தமான "அமலனாதி பிரானில்" கூறியபடி சேவிக்க வேணும். பெருமாள் திருமார்பில் உள்ள பிராட்டியாரையும் சேவித்து, தீர்த்தப்ரசாதம், திருத்துளாய், ஸ்ரீசடகோபம் முதலியைவகளை பெற்றுக்கொண்டு, மனதினால் 'தேவரீர் க்ருபையினால் அடியேன் சேவிக்கும் பாக்யம் பெற்றேன். அடியேனுடைய அபசாரங்களை க்ஷமித்தருளி, க்ருதார்த்தனாக்கி விடை தந்தருளல் வேண்டும்' என பிரார்த்தித்துக்கொண்டு, சக்கரம் போல் சடக்கென திரும்பாமலும், நம் பின்பகுதியை நேரே காட்டிக்கொண்டு திரும்பிவராமல், பெருமாள், தாயார் ஆகியோரைப் பார்த்துக்கொண்டே பின்னால் நடந்து மண்டபத்தைவிட்டு வெளியில் வரவேணும். பெருமாள், தாயார் முதலியோரை சேவிக்கும் போது அந்தந்த மூர்த்திக்குரிய மூல மந்த்ரங்களையோ அல்லது அவர்களுக்குரிய ஸ்தோத்திரங்களையோ விஷ்ணு சகஸ்ரநாமத்தையோ அதுவும் தெரியாவிட்டால் "த்வயம்" சதா அனுஸநதேய மாகிறபடியால், "தவயததை" அனுஸந்தானம செயதுகொணடே சேவிகக வேணடும் என்பதாகும். ஒன்றுமே தெரியவில்லை என்றால் தாரக நாமமாகிய "ராம" நாமத்தைச் சொல்லிக்கொண்டு சேவிக்க வேண்டும். திரும்பிவரும்போது தனக்கு தாயார், பெருமாள் ஆகியோரை சேவித்து வர அனுமதி கொடுத்த த்வாரபாலகர்களிடம் மனதினால் விடை பெற்றுக் கொண்டு வரவேணும். கோவில்களில் பிரதக்ஷிணம் செய்யும் போது பலிபீடத்தையும் சேர்த்தே பிரதக்ஷிணம் செய்தல் வேண்டும்.

### கோவில்களில் செய்யத்தகாதவைகள் :

கோவிலுக்குச் செல்லும் போது, சட்டை போன்ற மேல் அங்கிகளினால் மூடிக்கொண்டு செல்லலாகாது. முன்காலங்களிலெல்லாம் கோவிலுக்குச் செல்பவர்கள், பெண்களைத் தவிர, மற்றவர்கள் இடைக்கு மேல் உடலை மூடாமல் தான் வழிபாடு செய்து வந்தனர். காலப்போக்கில் இது மறைந்துவிட்டது. ஆனாலும் இன்றும் கேரளமாநிலத்திலுள்ள சில கோவில்களில், மேல் சட்டையோ, காற்சட்டையோ அணிந்து வருபவர்களை உள்ளே சென்று வழிபாடு செய்ய அனுமதிப்பதில்லை. கோவில்களில் பிரதக்ஷிணம் செய்யும் போதும் வழிபாடு செய்யும்போதும், மற்றவர்களுடன் வீண்பேச்சு பேசுதல் கூடாது. தெய்வங்களை ஒற்றைகையால் தொழலாகாது. சந்நிதிகளில் படுக்கை விரித்து படுப்பதும், கால்களை நீட்டி கொண்டு உட்காருவதும் கூடாது. வேடிக்கை பேச்சு, கோபித்தல், ஸ்தீரிகளிடம அளவுககதிகமாக இனபமான வாரததைகள முதலியவைகளும கூடாது. மறறும சந்நிதிகளில சோகபரமான அழுகுரல், அபானவாயு விடுதலும ஆகாது. ஒருவரை துதிசெயதும் ஒருவரை நிநதிததும பேசுதலும் நல்லவையாகா. பெரியோரையும குருவையும, நிநதித்து பேசககூடாது. தனனைத்தானே புகழ்ந்து பேசுதலும் கூடாது. தவிர அரசாமூர்த்தி எந்த உலோகத்தினால் செய்யப்பட்டது அல்லது எந்த பொருளினால் செயயப்பட்டது என்ற ஆராய்ச்சியும் கூடாது. அர்ச்சாவதார விகரஹங்களை சாதாரணமான கல், மண், சுதை, மரம், பஞ்சலோகம் என்று எண்ணாமல் தெய்வமாகவே நினைத்து வழிபடுதல் வேண்டும். சந்நிதிகளில் கொடுக்கப்படும் "ஓரைகள்" போன்ற பிரசாதங்களை இரண்டு கைகளினாலும் பயபக்தியுடன் வாங்கி, மஹாப்ரஸாதமாகக் கருதி வாங்கிக் கொள்ளல்வேண்டும். அங்கேயே உண்பதனால் வாயிலிருந்து பிராசாதம் கோவிலுக்குள் விழாமல் பார்த்து உண்ணுதல் அவசியம். உண்டபிறகு கைகளை அங்குள்ள தூண்களில் துடைக்கலாகாது. வெளியில் வந்து கைகளை, பிறர் ஜலம் கொட்ட அலம்புதல் வேண்டும். சந்நிதிகளில் எச்சில் துப்பக்கூடாது. மேற்கூறியவைகள் எல்லாம் பொதுவாக எல்லா சந்திகளுக்கும் பொருந்தும். இனி வைணவர்களால் மிகச் சிறப்பானதாக போற்றப்படும். கோயில், திருமலை, பெருமாள் கோவில், திருநாராயணபுரம என்ற முக்கிய சிறப்புமிக்க தலங்களில் வழிபாட்டு முறை மட்டும் மேலும் தெரிந்து கொள்வோம்.

### கோயில் :

வைணவ ஸம்ப்ரதாயத்தில், "கோயில்" என்றால அது ஸ்ரீரங்கத்தைக் குறிக்கும். "யதஸத்வாத நரோ யாதி நரகஞசாப்ய தோகதிகம்" எனகிறபடியே, எந்த ஸ்தலத்தை அடைந்து சேவித்தால ஜீவாதமாக்கள் எல்லாம் நரகத்திலிருந்து விடுபடுவார்களோ அதுவே திருவரங்கம் என்பதாகும். இத்தலத்திற்கு வருபவர்கள் முதலில் வடதிருக்காவேரிக்குச் சென்று நீராடி, கேசவாதி நாமாக்களைச் சொல்லி த்வாதச ஊர்த்வபுண்டரங்களை சாத்திக் கொண்டு, நித்யகர்மானுஷ்டானங்களையும் முடித்துக் கொண்டு வரும்போது ஸ்ரீரங்கம் கோயில் கோபுரங்களை பார்த்த உடனேயே, "கொடியடி நெடுமதிள் கோபுரம் குறுகினர்" என்ற நம்மாழ்வார் வாக்குப்படி கொடிக்கம்பம், மதில்களையும் வணங்கி கோபுரங்களின் அருகில் வந்து சாஷ்டாங்கமாக தண்டன் சமர்ப்பிக்க வேணும். பின்பு திருமாலை தந்த பெருமாள் (தொண்டரடிப்பொடி) வீதி மூலமாக நுழைந்து பிரதக்ஷிணமாக எழுந்தருளி, திருவிக்ரமன் வீதிகளையும் வலம் செய்து, பெரிய பலி பீடத்தில் தண்டன் சமர்ப்பித்து, ஆளரியை திருவடித்தொழுது, தாயாரான ஸ்ரீரங்கநாச்சியாரை சேவித்து, சந்த்ரபுஷ்கரிணியில் தீர்த்தஸ்வீகரணம் செய்து கொண்டு, எல்லா கோபுரங்களையும் சேவித்து, "கடைத்தலையிலிருந்து வாழுஞ்சோம்பர்" ஆகிய நம்மாழ்வார் தொடக்கமாக, எல்லா ஆழ்வார், ஆசார்யர்களையும், மற்றுமுள்ள சுற்றுக்கோயில்களில் உள்ள எம்பெருமான்களையும் சேவித்து, "அணியனார் செம்பொனாய வருவரையனைய கோயில" என்கிறபடி அணியரங்கன திருமுறறத்தில் புகுந்து, தணடன் சமரப்பித்து உளளே சென்று வலஞ்செய்து, "போகமணடபம" எனப பெயர் பூண்ட, "ப்ரணவாகார விமானததை சேவித்து, சேனை முதலியாரை சேவித்துக்கொண்டு, அழகிய மணவாளன் திருமண்டபத்தில் எழுந்தருளி, "பாம்பணை பள்ளி கொள்ளும்", கடல் விளங்கு கருமேனியம்மான் தன்னை கண்ணாரக்கண்டு உகந்து, "திருமணத்தூணைப் பற்றி நின்று வாயார வாழ்த்தி, திருப்பாணாழ்வார், "அமலனாதிபிரானில்" அருளிச் செய்துள்ளபடியே, பாதாதி கேசப்பர்யந்தமாக, "அண்டர்கோன் அணியரங்கன் என் அமுதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினை காணாவே" என்னும்படியாக பெருமானை நன்கு அனுபவித்து, திருப்பல்லாண்டை அனுஸந்தித்த பிறகு, ஸ்ரீஆளவந்தார், "ஸ்தோத்ரரத்னத்"தில் அருளிச்செய்துள்ள,

"நமோ நமோ வாங்மநஸாதிஸூமயே
நமோ, நமோ வாங்மநஸைக
ஸூமயே
நமோ, நமோ நந்த மஹாவிஹூதயே
நமோ நமோ நந்த தயைகஸிந்தவே
(21)

நதர்மநிஷ்டோஸ்மி நசாத்மவேதி
நபக்திமாந்த்வச்சரணாரவிந்தே
அகிஞ்ச நோநந்யகதி: ஸரண்ய:
த்வத்பாதமூலம்
ஸரணம் ப்ரபத்யே" (22)

என்று பெருமானின் திருவடிகளை சரணாகதி செய்து, தீர்த்தம், ஸ்ரீசடாரி முதலியவைகளை ஸ்வீகரித்துக் கொண்டு பெருமாளைப் பார்த்தபடியே பின்னால் நடந்து பிறகு திரும்பி வரவேணும் என்பதே முறையாகும்.

### இனி திருமலை திருப்பதி என்ற பிரசித்தி பெற்றதை வழிபடும் முறை பார்ப்போம் :

முன் காலங்களிலெல்லாம் திருமலை திருப்பதிக்கு பஸ் வசதிகள் கிடையாது. கீழ் திருப்பதி என்கிற கோவிந்த ராஜ பட்டணம் வரைதான் ரயிலிலோ, பஸ்ஸிலோ செல்ல முடியும். பிறகு திருமலைக்கு கால்நடையாகவே செல்வார்கள். ஆனால், திருமலை வரையிலும் பஸ்ஸிலும், காரிலும் போகும் வசதி தற்காலத்தில் உள்ளது. வாகனங்களில் வருபவர்கள் சிறிது தூரத்திலேயே வாகனங்களை விட்டிறங்கி, நடந்து சென்று வைகுந்தன் திருவாசலில் தண்டன் சமர்ப்பித்து கோனேரியில் தீர்த்தமாடி, த்வாதச புண்டரங்களை சாற்றிக் கொண்டு, விஷ்ணுசகஸ்ரநாமத்தையோ அல்லது வேறு ஏதாவது ஒரு துதியையோ, அல்லது ஆழ்வார்களின் அருளிச் செயல்களையோ அனுஸந்தானம் செய்து கொண்டு நாலு வீதிகளையும் வலம் செய்து, "சிந்தாமணிகள் பகரல்லைப் பகல் செய்" என்கிறபடி மாடகூட, தோரண, கோபுர ப்ராகாரங்களை அனுபவித்துப் பிறகு பெரிய திருமலை நம்பிகள் கைங்கர்யம் செய்த திருநந்தவனத்தையும் பார்த்து ஸ்ரீஆனந்தாழ்வானை மனதினால் தியானித்து, "தேனேய் பூம் பொழில்" என்றும், "விரையார் பொழில்" என்றும், விளங்கும் சோலைகளையும், செண்பகம், செருத்தி, திருமகிழ்பாடலம், சுரபுன்னை முதலிய மரங்கள் அடங்கிய வனத்தையும் பார்த்துக்கொண்டு, புஷ்கரணியின் வடமேற்கு மூலையில் உள்ள "நிலங்கோட்டிடை கொண்ட ஞானப் பிரான்"

என்று விளங்கும் ஸ்ரீவராஹப் பெருமாளை சேவிக்க வேண்டும். பிறகு திருவாசலிலே தண்டனிட்டு, குலசேகராழ்வார் அருளிச்செய்துள்ளபடி, "அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்", குலசேகரன்படி முதலான எல்லா படிகளையும் கடந்து, உள்ளே சென்று அத்தாணிப்புளியை சேவித்து, ஸ்ரீபலி பீடத்தில் தண்டனிட்டு, புஷ்பமண்டபத்தை தர்சித்து, பிரதக்ஷிணமாக வந்து, "தனுர்மாசே ஸிதே பக்ஷே த்வாதஸ்யா மருணோதயே, ஆயாந்திஸர்வதீர்த்தாநி ஸ்வாமி புஷ்கரிணீ ஜலே" என்றபடி மார்கழி மாத சுக்ல பக்ஷ த்வாதசி திதியன்று சூரிய உதயத்திற்குமுன் வரும் அருணோதய காலத்தில், எல்லா தீர்த்தங்களும் ஸ்வாமிபுஷ்கரிணியில் வருகின்றன என்றபடி, ஸ்வாமி புஷ்கரிணியில் தீர்த்தம் ஸ்வீகரித்துக் கொண்டு, திருவாசலுக்குச் சென்று தண்டன் சமர்ப்பித்து, திருமடைப்பள்ளி, யாகசாலை, திருமாமணி மண்டபவம் முதலியவைகளை சேவித்து, சேனை முதலியாரையும் சேவித்து, "வேங்கடாத்ரீ" என்ற பெயர் கொண்ட, திருமலையை சேவித்து புஷ்ப மண்டபம் எனப் பெயர்பூண்ட "ஆனந்த நிலைய விமானத்தை சேவித்த" பிறகு, ஜய விஜயர்களான த்வாரபாலகர்களின் அனுமதியை மனத்தால் பெருமாளை சேவிக்க வாங்கிக் கொண்டு, "மணிநூபுராதி கிரீட்டாந்த பர்யந்த திவ்யாபரண, திவ்யமால்யாம்பர, திவ்யாங்கராக சோபிதமான" வடிவமுகனை, பாதாதி கேசாந்தமாக அனுபவித்து, "அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா, நிகரில் புகழாய், உலக மூன்றுடைய யாய், என்னையாழ்வானே, நிகரில் முனிகணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே, புகலொன்றில்லாவடியேன, உன்னடிக் கீழ் அமர்ந்து புகுந்தேனே" என்று நம்மாழ்வார் அருளிச்செய்துள்ளபடி பெருமானிடம், தாயாரை புருஷாகாரமாகக் கொண்டு சரணாகதி செய்து, சேவித்து, தீர்த்தப்ரசாதம், ஸ்ரீசடாரி பெற்று திரும்ப வேண்டும். திவ்ய தேசங்களை சேவிக்கச் சென்றவர்கள், அந்த திவ்ய தேசத்தில் மூன்று நாட்கள் தங்கி சேவிக்க வேண்டும் என்பது நியதியாகும்.

## இனி பெருமாள் கோயில் எனப்படும் காஞ்சியை வழிபடுமுறையை பார்ப்போம் :

காஞ்சிபுரம் ஸ்ரீவரதராஜபெருமாள் கோவிலுக்குப் போகும் போதும் முன்பு கூறியபடியே பாதசாரியாக சென்று, ஸ்ரீகோபுரராஜனையும், ஆனை காத்தபெருமானையும் சேவித்து கொண்டு உள்ளே சென்று, "மஹாவராஹந்தே வேஸம்த்ரஷ்டுகாமோ ரஸாதலாத் நிர்யயௌயத்ரபகவாநநந்த: பந்த கேஸ்வர: தீர்த்தேஸ்மின் மஹா புண்யே ஸித்தஸங்க நிஷேவிதே-ஸமாஹ்ருதாநி தீர்த்தாநி ஸர்வாணி முநிபிஸ்ஸதா" என்கிற பிரகாரம், அதாவது அத்யந்த புண்யகரமாய், சித்த கணங்களால் சதா சூழப்பட்டு, ஸமஸ்த்தமான தீர்த்தங்களின் பலன்களையெல்லாம் தானே தரத்தக்கதாக அமைந்திருக்கும் என்று ரிஷிகளால் கூறப்பட்டிருக்கிற பிரபாவத்தையுடைய "திருவனந்த ஸரஸிலே" தீர்த்தமாடி, கேசவாதி த்வாதச புண்டரங்களை சாற்றிக்கொண்டு, சந்த்யாவநதனாதி நித்யகர்மானுஷ்டானங்களையும் முடித்துக்கொண்டு, ஆதிசேஷன் எந்த தேவனை சேவிக்க வேண்டி, அதிக ஆவலோடு தன் இருப்பிடத்தை விட்டுப் புறப்பட்டு வந்து நாடினானோ, அந்த கோலவராஹப் பெருமானையும் சேவித்து ப்ரதக்ஷிணமாக வந்து திருவனந்தாழ்வானை சேவித்து திருப்புற்றுக்கழலடியிலே தண்டனிட்டு, யமுனைத்துறைவர் திருமுற்றம் சென்று, "நமோ நமோ யாமுநாய, யாமுநாய நமோ நமோ" என்று அநுஸந்தானம் செய்து கொண்டு, கரியமாணிக்கத் தெம்தெம்பெருமானை திருவடித்தொழுது, "தியாகமண்டபம்" எனப் பெயர் கொண்ட புண்ணிய கோடி விமானத்தையும், திருமடைப்பள்ளியையும் சேவித்துக் கொண்டு பெருந்தேவித்தாயாரையும் பேரருளாளனையும் சேவிக்க வேணும். "ஆகாரத்ரய ஸம்பந்தா அரவிந்த நிவாஸினீம், அஸேஷ ஜகதீசித்ரீம் வந்தே வரதவல்லபாம்" என்கிறபடி அனன்யார்ஹ சேஷத்வ, அனன்ய போக்யத்வங்களாகிற ஆகாரத்ரயத்தயுடையவளாய், எல்லா உலகுக்கும், நியாமகையாயிருக்கிற பெருந்தேவித்தாயாரை சேவிக்கிறேன் என்று சேவித்துக்கொண்டு, தீர்த்தப்ரசாதங்கள் ஸ்ரீசடாரி முதலியவைகளை பெற்றுக்கொண்டு, வலமாக வந்து, திருமஞ்சன மண்டபத்தில் திருவாழியாழ்வானையும், பெரிய திருவடியையும் சேவித்து சேனை முதலியார் கழல் வணங்கி, "அஸேஷகிரிராஜாய ஸ்ரீஹஸ்திகிரியே நம:" என்று ஹஸ்திகிரி ராஜனுக்கு தண்டன் சமர்ப்பித்து, வையாமாளிகையிலேறி உள்ளே வந்து, "உலகேத்து ஆழியனான" அத்தியூரானை சேவித்துக் கொண்டு தீர்த்தப்பிராசாதங்கள் பெற்றுக் கொண்டு, மெதுவாக பின்னால்

நடந்து வந்து தவாரபாலகர்க ளையும சேவித்துக கொணடு வரவேணும.

## இனி திருநாராயணபுரம் (மேல்கோட்டை) சேவாக்ர-மமும் காண்போம் :

திருநாராயணபுரத்திற்கு, "யாதவாத்ரி" என்ற பெயரு முண்டு. பகவத்ராமானுஜர் மேல்நாட்டில் சஞ்சாரம் செய்தபோது, இத்தலத்தில் பன்னிரண்டு வருடகாலம், ஸ்ரீபாஷ்யம் வ்யாக்யானித்துக் கொண்டும், கைங்கர்யம் செய்தும் வந்தார். ஸ்ரீராமானுஜர்தான், "யாதவாத்ரி" என்று பெயர் கொண்ட இத்தலத்தை, "திருநாராயணபுரம்" என்று பெயர் மாற்றம் செய்தார். இம் மலை க்ருதயுகத்திலே "சனத்கு மாரர்" சத்திய லோகத்திலிருந்து, ஆனந்தமயமான திவ்ய விமானத்தோடு, எழுந்தருளிவித்துக் கொண்டு, "திருநாராயணரை" இங்கு பிரதிஷ்டை செய்தபடியால் இதற்கு "நாராயணாத்ரி" என்றும், த்ரேதாயுகத்தில் "தத்தாத்ரேயர்" நான்கு வேதபுருஷர்களையும் சீடராக்கி வேதருஷ்கரணியில் வேதாத்யயனம் செய்து கொண்டேயிருந்தபடியால், இதற்கு, "வேதாத்ரி" என்ற பெயரும், த்வாபரயுகத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானால் இத்தலம் ஆராதிக்கப்பட்டதால் இதற்கு யாதவாத்ரி என்றும், "யுகே கலௌது ஸம்ப்ராப்தே யதிராஜேன பூஜநாத், யதிசைலம் இதி ப்ரோக்தம் நாமதே யாந்தவங்கிரே:" என்றபடி இக் கலியில் இத்தலத்தில் ஸ்ரீபகவத் ராமானுஜர் எழுந்தருளி ஜீர்ணோத்தாரணம் செய்து பன்னிரண்டு வருடகாலம், இங்கு வசித்து வந்த படியால் "யதிசைலம்" என்ற பெயரும் உண்டாயிற்று. இக்காரணத்தால்தான் ஸ்ரீராமானுஜர், "திருநாராயணபுரத்தில் ஒரு குடிசையைக் கட்டிக்கொண்டாவது வாழுங்கள்" என்று தன் பொன்னுரைகளில் சொல்லிப்போனார். இத்தலத்திற்குச் சென்றளவிலே யதிசைல சிகரத்தையும், கோபுரங்களையும் சேவித்து, எல்லா பாபங்களையும் போக்கிவிடக்கூடிய புனித தீர்த்தமான, "கல்யாண ஸரசில், நீராடி நான்முகன் கோபுரத்தை சேவித்து பலிபீடத்தையும் பிரதக்ஷிணமாக வந்து தண்டன் சமர்ப்பித்து, உடையவர் (ஸ்ரீராமானுஜர்) சந்நிதிக்கு வந்து, "யோ நித்ய மச்சுத" என்று தொடங்கும் தனியனை சேவித்து, அங்கு தீர்த்தம் பிரசாதம் பெற்றுக்கொண்டு, வலமாக வந்து, "பஸ்ச்சாதபி விமாநஸ்யப்காராந்தர மத்யத: ஸுதர்ஸனஞ்ச லக்ஷ்மீஸ்ச்ச வர்த்ததே ஸர்வ காமதே" என்று சொல்லப்பட்டிருக்கிற திருவாழியாழ்வானை சேவித்து, பின் தாயாரான யதுகிரிநாச்சியாரை சேவித்துக் கொண்டு திவ்ய விமானத்தையும் சேவித்து, உள்ளே சென்று நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் முதலானோரை சேவித்துக்கொண்டு, பின்பு செல்வபிள்ளையையும் சேவித்து தீர்த்தம் சடாரி பெற்றுக்கொண்டு, சேனை முதலியாரை சேவித்து, ஜய, விஜயர்களான த்வாரபாலகர்களின் அனுமதியை மனதில் வாங்கிக்கொண்டு, திருப்பல்லாண்டை அனுஸந்தானம் செய்து கொண்டே, திருநாராணப்பெருமாளை, பாதாதிகேசாந்தமாக சேவித்துக்கொண்டு, தீர்த்தம் ஸ்ரீசடகோபம் பெற்றுக்கொண்டு பின்னாடியே நடந்து வந்து படியைக் கடந்து திரும்பி வரவேண்டும் என்பது முறையாகும்.

## முடிவுரை :

எல்லா ஆலயங்களும் புனிதமானவை. ஆலயங்களுக்குச் செல்பவர்கள், ஆலயங்களின் புனிதத்தன்மை கெடாதவாறு நடந்து கொள்ள வேணும். பயபக்தியுடன் கோவில்களில் உள்ள எம்பெருமான்களை உள்ளம் கசிந்து வழிபடவேண்டும். பெருமாள் கோவில்களை சேவித்துக்கொண்டு திரும்புமுன் மறுபடியும் விஷ்வக்கேனர், சந்நிதிக்கு வந்து சேவித்து, அஞ்சலிஹஸ்தனாய், "ஸ்ரீவிஷ்ணுகணுதிபதயே, அடியேன் சேவாக்ரமமம் தெரியாமல் சேவித்திருந்தாலும், க்ரமமாக சேவித்ததாக எண்ணிக் கொண்டு, ஸர்வ விக்கினங்களையும் போக்கி க்ருபை செய்தருள வேணும்", என்று க்ருதஞையை தெரிவித்துவிட்டு கோவிலைவிட்டு த்வயம் அனுஸந்தானத்துடன் வரவேண்டும் தவிர பெருமாள், தாயார் முதலியோரை சேவிக்கும் போதெல்லாம் நம் மனோரதங்களையெல்லாம் நிறைவேற்றி வைக்க வேண்டும் என்று பிரார்த்திக்காமல் மறவாநினைப்பே பிறவா நெறிக்கு வழி என்பதுபோல், சதா பகவத்தியானமும், பகவத், பாகவத கைங்கர்யங்கள், ஆசார்யகைங்கர்யங்கள் முதலியவைகளை செய்ய சக்தியையும் கொடுத்து, "அனாயாஸேண மரணம் வினாதைன்யேன ஜீவிதம்" என்று மட்டும் பிரார்த்திக்கலாம் என்பது பெரியோர்களின் வாக்காகும் பகவத், பாகவத, ஆசார்ய கைங்கர்யமும் செய்து கொண்டு உஜ்ஜீவிக்கும் வழியில் நடப்போம்.

ஆழ்வார், எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம். ●

தேவர்களும், அசுரர்களும் மந்திர மலையை மத்தாகக் கொண்டு வாசுகியைக் கயிறாக வைத்து பாற்கடலைக் கடைந்த பொழுது, அதிலிருந்து நந்தா, ஸுபத்ரா, ஸுரபீ, ஸுசிலா, பகுலா என்ற ஐந்து காமதேனுக்கள் உண்டாயின. ஜமதக்நி முனிவர் நந்தாவையும், பரத்வாஜர் ஸுபத்ராவையும், வஸிஷ்டர் ஸுரபியையும், அஸிதர் ஸுசிலாவையும், கௌதமர் பகுலாவையும் ஏற்றுக்கொண்டனர்.

பசுவினிடமிருந்து கிடைக்கும் கோமயம், கோமூத்ரம், கோரோசனை, கோக்ஷீரம், கோவின் தயிர், கோவின் நெய் (பசுநெய்) மிக பரிசுத்தமானவை.

கோமயத்திலிருந்து சிவனுக்குப் பிரியமான வில்வ மரம் தோன்றிற்று. தாமரை விதைகளும் உண்டாயின.

கோமூத்ரத்திலிருந்து குக்குலு என்பது உண்டாயிற்று.

நெய்யிலிருந்து அம்ருதம் உண்டானது.

பாலிருந்து உலக பீஜம் உண்டானது.

ஒரே இடத்திலிருந்து பிராமணனும் பசுவும் உண்டானார்கள். பிராமணனிடம் மந்திரமும் பசுவிடம் ஹவிஸ்ஸும் அமைந்தது. மந்திரம் கூறி ஸவிஸ்ஸை (சாதம்) அக்நியில் ஹோமம் செய்தால் அது தேவர்க்கு அமிருதமாகும். தேவர்கள் உலகிற்கு மழையை அளித்தனர்.

பசுவிடம் ஆறு அங்கங்களுடன் வேதம் அமர்ந்து உள்ளது. ஸகல தேவர்களும் தங்கி இருக்கின்றனர். .உமாதேவியும் பூதேவியும் கோ ரூபமெடுத்தனர்.



## பசும்பாலால் அபிஷேகம் ஏன்?

ஔர்வர் என்னும் மகரிஷி பல்லாண்டு காலம் இமய மலைச்சாரலில் கங்காதத்துவாரம் என்னுமிடத்தில் கடும் தவம் புரிந்து வந்தார். அவரது தவத்தின் மகிமையால் அவ்வுலகமெல்லாம் தாபம் அடைந்தது. ஒரு நாள் முனிவர் புஷ்பம் பறிக்க வெளியில் சென்ற சமயம் ஔர்வர் மகரிஷியின் தவத்தை கெடுத்து, அதன்மூலம் உலக தாபத்தைக் குறைக்க எண்ணி சாட்சாத் பரமசிவன் ஔர்வர் ஆச்ரமத்திற்கு வந்தார். பரமசிவனின் தேஜஸ்ஸினால் ஔர்வரின் ஆச்ரமம் எரிந்து சாம்பல் ஆனது.

புஷ்பத்துடன் வந்து சேர்ந்த மகரிஷி, அழகிய தனது ஆச்ரமம் சிவனால் எரிக்கப்பட்டதைக் கண்டு கடும் கோபமுற்றார். கோபமுற்ற மகரிஷி, சிவனும் தாபமடைந்து உலகமெல்லாம் திரியட்டும் என்று மகரிஷி சாபம் இட்டார்.

பரமசிவனுக்கு ஏற்பட்ட தாபத்தால் மூவுலகத்திற்கும் தாபம் ஏற்பட்டது. இதனால் சகலமான தேவர்களும் பரமசிவனுக்கு ஏற்பட்ட தாபத்தினைப் போக்க வழி தெரியாமல், கடைசியில் ஔர்வர் மகரிஷி திருவடியில் சரணடைந்து வணங்கி நின்றனர். நான் அளித்த சாபம் கோகர்ணத்தில் நிவர்த்தியாகும் என்று மகரிஷி திருவாய் மலர்ந்தருளினார்.

உடன் சகல தேவர்களும் பரமசிவனுடன் வைகுண்டம் சென்று நாராயணனிடம் சகல விஷ

# பசுவின் மஹிமை

திரு. P. முரளீதரன் - திருச்சி.

யத்தையும் கூறி, பரமசிவனின் தாபத்தை நீக்க வேண்டினார். மகாவிஷ்ணுவும் உடன் கோகர்ணத்தில் உள்ள அனைத்து பசுக்களையும் வரவழைத்து, பசுக்களின் பாலைக் கொண்டு சிவனுக்கு அபிஷேகம் செய்தார். உடனே சிவனது தாபம் அகல, உலகெல்லாம் தாபம் அகன்று ஆனந்தம் உண்டாயிற்று.

மகாவிஷ்ணு சிவனது தாபத்தை நீக்கியதோடு அல்லாமல், உலக க்ஷேமத்திற்காக ஒரு வரமும் அளித்தார். எவர் ஒருவர் சிவலிங்கத்திற்கு கோக்ஷீரத்தினால் (பசும் பாலால்) அபிஷேகம் செய்கிறாரோ, அவரது தாபமும் உலக தாபமும் அகலும் என்று மகாவிஷ்ணு வரமளித்தார்.

| | | |
|---|---|---|
| 2 கொம்புகளின் அடியில் | - | பிரும்மா, விஷ்ணு |
| 2 கொம்புகளின் நுனியில் | - | ஸர்வ தீர்த்தங்கள் |
| 2 கொம்புக்களுக்கிடையே | - | ஸதாசிவன் |
| நெற்றியில் | - | கௌரீ தேவி |
| மூக்குத் தண்டில் | - | ஷண்முகன் |
| 2 மூக்கு த்வாரங்களில் | - | கம்பள அச்வதர நாகர்கள் |
| 2 காதுகளில் | - | அச்வநீ தேவர்கள் |
| 2 கண்களில் | - | சந்திர, ஸூர்யர்கள் |
| பற்களில் | - | வஸீக்கம் |
| நாக்கில் | - | வருணன் |
| தொண்டையில் | - | ஸரஸ்வதி |
| 2 கன்னங்களில் | - | யமனும், யக்ஷனும் |
| 2 உதடுகளில் | - | 2 ஸந்தியைகள் |
| கழுத்தில் | - | தேவேந்திரன் |
| கொண்டையில் | - | ராக்ஷஸர்கள் |
| பக்கங்களில் | - | த்யௌர் தேவதை |
| 4 கால்களில் | - | 4 பாதமுள்ள தர்மம் |
| குளம்பு நடுவில் | - | கந்தர்வர் |
| குளம்பு நுனியில் | - | நாகர்கள் |
| குளம்பு பின்புறத்தில் | - | ராக்ஷஸர்கள் |
| முதுகில் | - | ஏகாதசருத்ரர் |
| எல்லா ஸந்திகளிலும் | - | வருணன் |
| பின்புறத்தில் | - | பித்ரு தேவர்கள் |
| கன்னங்களில் | - | மாநவர் |
| சாணிபோடும் இடத்தில் | - | லக்ஷ்மீதேவீ |
| கோமூத்திரத்தில் | - | கங்காதேவீ |
| சாணியில் | - | யமுநா தேவீ |
| மயிர்க்கால்களில் | - | 33 கோடி தேவர்கள் |
| வயிற்றில் | - | மலை, காடு, நதிகளுடன் பூதேவி |
| 4 ஸ்தநங்களில் | - | நான்கு கடல்கள் |
| வயிற்றினுள் | - | கார்ஹபத்ய அக்நி |
| ஹிருதயத்தில் | - | தக்ஷிணைகநி |
| கழுத்தில் | - | ஆஹவநீயாக்நி |
| கன்னத்திலுள்ளே | - | ஸப்ய அக்நி |
| எலும்புகளில் | - | மலைகள் |
| மஜ்ஜையில் | - | யாகங்கள் |

சிவப்பு முதலிய வர்ணங்களில் ரிக் முதலிய வேதங்கள்.

பசுவின் பாலை கவயம் என்ற பசு போன்ற ஒரு பிராணியின் கொம்பினால் அபிஷேகம் செய்வது அதிவிரைவில் தாபங்களை அகற்றி இன்பத்தை தரக்கூடியதாம்.

## கோ(பசு)தான பலன்

கோதானம் செய்பவர் விஷ்ணு லோகம் செல்வர். பசு பிரஸவிக்கும் தருவாயில் பசுவின் முகம் ஒரு புறம் கன்றின் முகம் ஒருபுறம் இருப்பதால் அதற்கு த்விமுகீ எனப்படும். அச்சமயம் அதைத் தானம் செய்தால் கோதானம், பூதானம் செய்த இரண்டின் பலனையும் பெறலாம். அப்பசுவின் **உடலில் எத்தனை** ரோமங்கள் **இருக்கின்**



ஸ்ரீ ஆதிநாதர் கோயில்
ஆழ்வார்திருநகரி.

# விற்பனைக்கு

திருமதி. எம்.எஸ். சுப்புலக்ஷ்மி, திருமதி. எம்.எல். வசந்தகுமாரி, திருமதி. வாணிஜெயராம், திருமதி. சுசிலா, திருமதி சுசிலா, திருமதி. ஜானகி மற்றும் திரு. பாலமுரளிகிருஷ்ணா, திரு எஸ்.பி. பாலசுப்பிரமண்யம் போன்ற புகழ்பெற்ற கலைஞர்களால் பாடப்பெற்றுப் பதிவு செய்யப்பட்ட ஒலி, ஒளி நாடாக்கள் பல தமிழ், தெலுங்கு, இந்தி, கன்னடம் மற்றும் ஸம்ஸ்கிருதம் போன்ற மொழிகளில் தி.தி. தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட்டுள்ளன.

ஒளி நாடாக்கள் :

1) ஸ்ரீவாரி பிரம்மோத்ஸவம் (ஏழுமலையான் பிரம்மோத்ஸவம்)
தெலுங்கு, தமிழ், கன்னடம், இந்தி மற்றும் ஆங்கிலம்

2) ஸ்ரீவேங்கடேஸ்வரா வைபவம் தெலுங்

திருப்பதியிலுள்ள எஸ்.வி. ஒலிப்பதிவு திட்டத்துறை அலுவலகத்தில் மட்டுமே விற்பனைச் சலுகைகள் கிடைக்கும். 20 கழிவு.

ஒலி நாடாக்கள் :

50 மற்றும் அதற்கும் மேலான எண்ணிக்கைகளைக் கொண்ட ஒலிநாடாக்களின் (ஒவ்வொரு வகையிலும்) மீது 20% கழிவு.

ஒளி நாடாக்கள்

10 மற்றும் அதற்கும் மேலான எண்ணிக்கைகளைக் கொண்ட ஒலிநாடாக்களின் (ஒவ்வொரு வகையிலும்) மீது 10% கழிவு.

இந்தியாவிலுள்ள எல்லா தி.தி. தேவஸ்தான விற்பனை அரங்குகளிலும் இவ் ஒலி, ஒளி நாடாக்கள் விற்பனைக்குக் கிடைக்கும்.

மொத்த விற்பனைக்குக் கீழ்வரும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

இயக்குநர்,
ஸ்ரீவேங்கடேஸ்வரா ஒலிப்பதிவு திட்டம்,
ஸப்தகிரி கட்டிடம்,
அலிபிரி சாலை, (தி.தி. தேவஸ்தானம)
திருப்பதி-517501.

றனவோ அவ்வளவு ஆண்டு காலம் வரை பிரமம லோகத்தைப் பெறுவான.

பசுவின் கழுததிலும, தலையிலும் சமஸ்த புண்ய தீரததங்கள் உள்ளன. ஆதலால் காலையில் எழுநது பசுவின் கழுத்தை சொரிந்து விட்டு நமஸ்காரம் செய்தால் 30 வருஷங்கள செய்த பாபங்கள் அகலும். பசுவை பிரதக்ஷணம் (சுற்றி வந்தால்) செய்தால் பூப்பிரதக்ஷிணம் செய்த பலன் உண்டு. பசியுள்ள பசுவிற்குப் புல்லும், நீரும் அளித்தால் கோமேத பலனைப் பெறுவர்.

## கோ த்வாதசியின் மகிமை

கார்த்திகை மாதம் சுக்ல மாதம் த்வாதசி திதியன்று கன்றுகளுடன் கூடிய பசுவை விதிப்படி பூஜித்து, பின் பதினெண் புராணங்களுடைய பெயருள்ள பின்வரும் ஸ்லோகத்தை எழுதி பூஜித்து நியமத்துடன் படித்தால் ஸத்புத்திரன் உண்டாவான் என்பது உண்மை.

ப்ராஹ்மம் பாத்மம் வைஷ்ணவம் ச
சைவம் பாகவதம் ததா
ததாந்யம் நாரதீயம் ச
மார்கண்டேயம் ச ஸப்தமம் ।
ஆக்னேய மஷ்டமம் ப்ரோக்தம்-
பவிஷ்யம் நவமம் ததா ।
தசமம் ப்ரம்மவைவர்த்தம்-
லைங்க மேகாதசம் ஸ்மிருதம் ।।
வாராஹம் த்வாதசம் ப்ரோக்தம்-
ஸ்காந்தம் சாபி த்ரயோதசம் ।
சதுர்தசம் வாமனகம் -கௌர்மம்
பஞ்சதசம் ஸ்மிருதம் ।
மாத்ஸ்யம் ச காருடம் சைவ
ப்ரம்மாண்டஞ்ச தத: பரம் ।।

இத்துணை சிறப்புள்ள பசுவினை நாமெல்லாம் பூஜித்து, ரக்ஷித்து சகலவிதமான நன்மைகளையும் பெறுவோமாக ❄

முன்னுரை :

இறைவன நினைப்பவர் மனம கோயிலாகக கொண்டருளுபவன். நெகநது நெக்கு நினைப்பவர நெஞசுளே, கடவுள் புகநது நின்று எழுந்தருளி விளஙகுகின்றார். இறைவன் தன்னை நினைப்பவர்களைத தானும நினைநது அருள் புரிகின்றான். தனனை நினையாதவர்களைத் தானும் நினையாமல் இருந்து விடுகின்றான். கம்பி முழுவதிலும் பரவி நிற்பினும், சொடுககியினைத் (Switch) தடடும்போது மட்டுமே மின்னாற்றல் வெளிப்பட்டு மின்னொளியினை நல்குகின்றது; சொடுக்கியினைத் தட்டாதபோது, மின்னாற்றல் மின்னொளியினை நல்காமல் வாளாதே இருக்கின்றது. அது போலவே, உயிர்களின் உள்ளங்களிலெல்லாம் உயிருக்குயிராய் எழுந்தருளி விளங்கும் இறைவன் தன்னை நினைக்கும்பொழுது கூடியும், நினையாத பொழுது நீங்கியும் நின்று, உயிர்களுககு அருள்புரிந்து வருகின்றான்.

ஈசன் இயல்பு :

தன்னை உணர்வினால் உன்னி, அன்புடன் நினைந்து உருகும் அடியவர்களுக்கு, இறைவன் தேனும் பாலும் அமுதமாகத் தித்திக்கின்றான். நினைத்தொறும் நினைத்தொறும் அன்பர்களின் உள்ளத்தில் ஆனந்தத் தேனைச் சொரிகின்றான் ஆண்டவன்! "காயத்துள் அமுது ஊற ஊறக் கரையிலா இன்ப உணர்வைக் கண்டு கொள்மின்" எனக்காட்டியருள்கின்றான்



# ஈசன் இயல்பு

புலவர் பொன்.கண்ணபுர சுப்பிரமணியன்-சம்மந்தபுரம்.

கடவுள்! பன்னில் ஊறும் பழத்தினும் இன்சுவையாய் அன்பர்களின் உள்ளத்தில் ஊறி, அளவிலாக் களிப்பினை அளித்தருள்கின்றான் எம்பெருமான்! இறைவனைத் தினமும் இடைவிடாமல் சிந்தித்துத் தியானித்தல் வேண்டும் என்பது எல்லாச் சமயங்களும் கூறும் முடிவான கருத்தாகும்.

"இடைவிடா துன்னைச் சிக்கெனப்
பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே"

என மணிவாசகப் பெருந்தகையும் திருவாய் மலர்ந்தருளுதல் காணலாம்.

## தேவாரப்பாடல் :

இங்ஙனம் இறைவனின் சிறந்த அருளியல்பினை செந்தமிழ் நாட்டுத் தெய்வச் சான்றோருள் ஒருவராகிய திருநாவுக்கரசர், தமது தேவாரப்பாடல் ஒன்றில் விளக்குகின்றார்.

"பன்னில் ஊறும் பழத்தினும்
இன்சுவை"
என்னில் ஊறு எனக்கே களிதரும்
உன்னில் உன்னும் உனாவிடில்
விட்டிடும்
என்னுள் ஈசன் இருந்த இயற்கையே"

## அச்சில் இல்லை :

திருநாவுக்கரசர் பெருமான் பாடியருளிய இந்தத் தேவாரப்பாடல், அச்சில் இடம்பெறுமல் தவறிப்போய் இருக்கின்றது. எனினும் இத்திருப்பாடல் திருநாவுக்கரசின் சிறந்த தேவாரப்பாடல்களுள் ஒன்று என்பதும், இதனை நம் முன்னைச் சான்றோர்கள் பலரும் படித்துச் சுவைத்து மகிழ்ந்து பாராட்டியுள்ளனர் - என்பதும், நமக்குப் பெருமகிழ்ச்சியை விளைவிக்கின்றது.

## பாம்பன் சுவாமிகள் :

இத்திருப்பாடலை அருள்மிகுந்த பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் அவர்கள், தாம் அரிதின் ஆராய்ந்து எழுதியுள்ள 'சைவ சமய சாரம்' என்னும் நூலில் மேற்கோள் காட்டியிருக்கின்றார். 'தகர வித்தை' என்னும் அரிய பொருள் பற்றி விளக்கிக் கொண்டு வருங்கால், இத்தேவாரத் திருப்பாடல் ஸ்ரீமத் சுவாமிகளால் மேற்கோளாக எடுத்து ஆளப்பட்டுள்ளது.

## சுவாமிநாத பண்டிதர் :

இங்ஙனம் ஸ்ரீமத் பாம்பன் குமர குருதாச சுவாமிகள் அவர்களால் 1908 ஆம் ஆண்டில் வெளிவந்த சைவ சமய சாரம் என்னும் நூலில் முதற் பதிப்பிலேயே மேற்கோளாக எடுத்தாளப் பெற்றிருந்தும், இச்சிறந்த தேவாரப்பாடல் இதற்குப் பின்னர் வெளிவந்த எத்தனையோ பல தேவாரப் பதிப்புகளிலும் விடுபட்டுப் போயிருப்பது வியப்பிற்குரியதாகத் திகழ்கின்றது. எனினும் 1911ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் திரு. சுவாமிநாத பண்டிதர் அவர்களால் வெளியிடப்பெற்ற அடங்கன் முறைப் பதிப்பில், இப்பாடல் 'அனுபந்தம்' என்னும் பிற்சேர்க்கையாகத் தரப்பெற்றிருப்பது ஒருவகையில் நமக்கு ஆறுதல் அளிக்கின்றது.

## தாயுமானவர் :

திருநாவுக்கரசர் அருளிச் செய்த இவ்வரிய இனிய பாடலை வேதாந்த சித்தாந்த சமரச ஞான வித்தகச் செல்வர் ஆகிய தாயுமான சுவாமிகள் (கி.பி. 1610-1661) தாமும் மிகவும் எடுத்துச் சிறப்பித்துரைத்து மகிழ்விக்கின்றார். தாயுமானவ சுவாமிகள் பாடலில் அறிஞுரை என்னும் பகுதியில்

"உன்னிலுன்னும் என்ற
உறுமொழியால் என இதயம்
தன்னிலுன்னி நன்னெறியைச்
சாரும் நாள் எந்நாளோ?"

என வரும் 'எந்நாட்கண்ணியில்' இச்சிறந்த இனிய தேவாரப்பாடல் எடுத்தாளப் பெற்றிருந்தல் காணலாம். தாயுமானவர் இப்பாடலை எடுத்தாண்டிருக்கும் செய்தினை, நமக்கு விளக்கியருளியவர் பாம்பன் சுவாமிகளேயாவர்.

## அருள்நந்தி சிவம் :

தாயுமான சுவாமிகளைப் போலவே, நம் சைவ சித்தாந்த சந்தான ஆசிரியர்களுள் ஒருவரும் சிவஞான சித்தியார் என்னும் ஒப்புயர்வற்ற செந்தமிழ்த் தத்துவ நூலினை இயற்றியருளியவரும் ஆகிய அருள்நந்தி சிவாச்சாரிய சுவாமிகள் (கி.பி. 13ஆம் நூற்றாண்டு) தாம் பாடியருளிய இருபா இருபஃது என்னும் சைவ சித்தாந்த சாத்திர நூலிலும் இப்பாடலை மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார்.

எண்டிசை விளங்க விளங்க
இருட்படாம் போக்கி
முண்டகம் மலர்த்தி மூதறிவு
அருளும்
மேதினி யுதய மெய்கண்ட தேவ!
கோதில் அமுத! குணப்பெருங்
குன்ற!
உன்னின் உன்னி உணாவிடிற்
பெயர்குவை
என்னும் அதுவே நின்னியல்பு
எனினே
வியங்கோ ளாளனும் ஆகி
இயங்கலும்
உண்டெனப் பாடுவை........

எனவரும் இருபா இருபஃது என்னும் சைவசித்தாந்த நூலின் 12ஆம் பாடலில், 6-7ஆம் வரிகளில் "உன்னின் உன்னி உனாவிடிற் பெயர்குவை என்னும் அதுவே நின்னியல்பு எனினே"

என அருள நநதி சிவாசசாரிய சுவாமிகள அநுவாதம செயது மேறகோளாகக காட்டி எடுதது மொழிந்திருபபது

**உன்னில் உனனும்**
**உனாவிடில் விட்டிடும்**
**என்னுள் ஈசன்**
**இருந்த இயற்கையே**

எனவரும் இவ்வழகிய தேவாரப் பாடலின் இரண்டு வரிகளையும் நினைவு கூர்ந்தேயாகும்.

## நமச்சிவாயத் தம்பிரான் :

இவ்வுண்மையைப் பிற உரையாசிரியர்கள் நுண்ணிதின் உணர்ந்து எடுத்துக்காட்டாத போது திருவாவடுதுறை ஆதீனத்து நமச்சிவாயத் தம்பிரான் அவர்கள் மட்டும் தமது நுண்மாண் நுழைபுலம் தோன்றுமாறு, தாம் இயற்றிய இருபா இருபஃது உரையில் இவ்வரிகளுக்குப் பொருள் விளங்காமல் இருந்தமைக்கு பொருள் விளக்குங்கால், இத்தேவாரப்பாடல் முழுவதுமாக எடுத்துக் காட்டி இன்புறுத்துகின்றார்கள். மேலும் இப்பாடல் தேவாரம் என்றும் அவர்களாற் கிளந்து கூறப்பெற்றுள்ளமை நமக்குத் தெளிவும் மகிழ்வும் பயக்கின்றது.

## முடிவுரை :

இதுகாறும் கூறியவற்றால் யாழ்ப்பாணம திருசுவாமிநாத பண்டிதர், ஸ்ரீமத்குமரகுருதாச சுவாமிகள், திருவாவடுதுறை ஆதீனம் நமச்சிவாயத்தம்பிரான், தாயுமான சுவாமிகள், அருள் நந்தி சிவாச்சாரிய சுவாமிகள் முதலிய பலராலும் நாம் கண்ட திருநாவுக்கரசர் பாடல் பெரிதும் போற்றப்பெற்றிருக்கும் செய்தி செவ்விதில் தெளியப்படும்.

# ஆறுவகை உபாயங்கள்

மனிதனுககு ஸதவம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்கள் உண்டு. ஒவ்வொருவரிடததில் ஒவ்வொரு தருணத்தில் ஒவ்வொனறு மிகுதியாக இருககும்.

அதன அடிபபடையில்தான் அரசரகள் ஆறுவகை உபாயஙகளைக கடைப்பிடித்தார்கள்.

1. பலமுள்ள அரசனுடன் விரோதம் ஏற்பட்டால், வேறு எதுவும் செய்யமுடியாத நிலையில், பலத்தைச் சேகரித்துககொள்ளும் காலம் வரை சமாதானம் செய்து கொள்வதற்கு "சந்தி" என்று பெயர.
2. பிறரால் உண்டான அவமானம் கருதியும், உடல், பொருள இவைகளுக்குப் பிறர தீங்கு உணடாக்குவதை எண்ணியும், கோபம் கொண்டு அவனுடன் பகை கொள்வதும், அவனுக்குப் பிரதியாகத் தீங்கிழைக்க முற்படுதலும் 'விகரஹமா'கும். தன் நன்மையைக் கருதித் தக்க சமயத்தில் பலமிருககும் பொழுது முன்பு ஸந்தி செய்து கொண்டவனிடமும் விக்ரஹம் கொள்ளலாம்.
3. சிறந்த பலமுடையவனும், தன் மககளால நேசிககப்பட்டவனும் வெற்றியில மிக விருபபமுடையவனுமான அரசன் பகைவன் மேல் படையெடுத்துச செல்லுதல் 'யாந'மாகும்.
4. படை எடுத்தற்கு முன்னும் பினனும் பகைவன ஒத்த பலமுடையவனாயிருநது வெலவது அரிதென எண்ணினால் ஒன்றும் செய்யாது வாளாவிருத்தல் 'ஆஸந'மாகும்.
5. பலமுள்ள இரு அரசர்கள் ஒருவரோடொருவர் பகைவர்களாக இருப்பின் அவரகளிடையில் இருவருககும் உதவுவதாகக கூறிககொண்டு, உண்மையில் எவருககும் உதவாமல் சொல்லொன்றும் செயலொன்றுமாக இருத்தல் 'த்வைதீபாவம்' எனப்படும். இவ்வுபாயம மிக மிக விழிப்பாக ஆளப்படவேண்டும்.
6. பலமான பகைவனால் துன்புறுததப்படும் பொழுது, செயலற்று இருககுங்கால், தன் இனத்தைச் சேர்ந்த பலமுள்ள யோககயமான ஒருவனை அண்டுதல் 'ஆச்ரய'மாகும்.

திரு. க. இராமலிங்கம் - புதுப்பேட்டை.

Edited and published on behalf of T.T. Devasthanams by K. Subba Rao, M.A., and Printed at T.T.D. Press by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

